உ

# தசகாரியம்.



திருவாரூர்

இலக்கண விளக்க பரம்பரை.

சிதம்பரநாத தேசிகர்

இயற்றியது.



சென்னை

சுதேசமித்திரன் பவர் பிரஸில் அச்சிடப்பட்டது.

1914.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவாரூர்

# சிதம்பரநாத தேசிகரியற்றிய

# தசகாரியம்.



மதுரைச்சங்க வித்வான்

ஸ்ரீமத் ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை

எழுதிய தமிழ் முகவுரையும், பிரம்ம ஸ்ரீ டாக்டர்

வை. வே. ரமண சாஸ்திரிகள் M. A. Ph. D.

F. Z. S. etc., எழுதிய ஆங்கில முகவுரையும்,

அரும்பதவுரையும் சேர்ந்தது.



சென்னை சுதேசமித்திரன் பவர் பிரஸ்.

**1914.**

# உரிமையுரை.



எனது பெற்றோர்கட்கு,

அடியேனைப் பெற்று வளர்த்து நன்னிலைமைக்குக் கொண்டு வரவேண்டுமென்று முயன்ற விருவர்களில், எனது தந்தை கல்வி பயிற்றப்புகுந்த சிறுநாட்களில் இம்மண்ணுலகைத் துறப்பினும், அப்பாரத்தைச் சலியாது வகித்து, கல்வி நலம் முழுமையும் செய்துவைக்க வியலாது விடினும் இந்நிலைமைக்காவது கொணர்ந்த என்றாய்க்கும் இந்நூலை உரிமையாக்க முன் வந்ததைப் பெரியோர்கள் பொறுத்தருள வேண்டும்.

இலக்கண விளக்கப் பரம்பரை;

திருவாரூர்-சோமசுந்தரதேசிகன்.

## பரிசோதகர் பத்திரம்.

குறிப்பு:—தெரிந்த பிழைகள் காட்டப்படவில்லை.

| பக்கம். | பாட்டெண். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | உ | கூராணை | கூரரணை |
| 2 | ரு | தரிசினிகள் | தரிசனிகள் |
| 3 | அ | தறுகுண்மா | தறுகுணமா |
| 5 | கூ | படலர | படவர |
| 6 | க | நிமலவர் | நிமலவா |
| 8 | ௬ | மேடணை | மேடணை |
| 13 | க | ப்ரசாதம்போல | ப்ரசாதம்போல் |
|  | உ | சூழவா | சூழ்வா |
|  | கூ | அன்னுயகன் | அந்நாயகன் |
| 14 | அ | னிரைபெற | 4வரியிற்சேர்க்க |
|  | ௰ | வருட் | 1வரிஎடுத்துவிட |
|  |  | தான் | 2 ஷ |
|  | ௰௬ | நிட்கிரு | நிட்கிரா |
| 15 | ௰ரு | மெஞ்ஞான | மெய்ஞ்ஞான |
|  | ௰எ | றிறையுவ | றேயிறைவ |
| 16 | உக | கனெழி | களெழி |
|  | உச | வாக்குகட்கோ | வாக்குக்கட்கோ |
| 24 | சஉ | பண்ணமா | பண்ணமர் |
|  |  | கொள | கொள் |
| 27 | ௬ | சிவப்ப | சிவப்பு |
| 30 | ௰எ | ௰ச | ௰எ |
| 30 | உக | வருண் | வருண |
| 31 | உச | யாதீ | யாதி |
|  |  | உஎ | ௬௰ |
| 34 | சஎ | மறுநான் | மறுநான் |
| 39 | ௰உ | போல்வ | போலவ |
| 41 | எ | சாக்கிரந்தோர் | சாக்கிரந்தேர் |
| ,, | ௰க | சிறப்பறு | சிறப்புறு |
| 44 | க | வருவு | வுருவு |
| 51 | ௰ | பொருத்து | பொருந்து |



உ
சிவமயம்.
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

## கடவுள் வாழ்த்து.

செஞ்சடையன் முக்கட் டிருமுகத்தன் பொற்களத்து
நஞ்சடைய வாங்கு நறும்பதத்தன்—நெஞ்சகத் தடையு
மந்தரத்து மன்றத் தருநடத்த னென்றுரைத்தும்
நந்தரத்து நம்பனையே நாம்.

## I. ஆக்கியோன் திறன்.

இத் தசகாரிய நூலாசிரியர் திருவாரூரின்கண் அபிஷேகத்தர் மரபிற் றோன்றிய சிதம்பரநாத தேசிகரென்பார். இவரது தந்தையார் இலக்கணவிளக்கஞ் வைத்தியநாத தேசிகர். இவர் தம் தந்தையாசிரியர் பக்கல் வடமொழி தென்மொழி இலக்கிய இலக்கணங்களை ஐயந்திரிபறக் கற்று ஆகமமுடிபும் வேதமுடிபும் இற்றெனத் தெளிந்தறிந்தவர். கவிகள் நான்கினும் வல்ல கவிஞர், அரும்பொருளைச் செம்பொருள் நடையாற் காட்டுங்கமகர், எதுவும் மேற்கோளும் நீட்டிப் பிறர் கொள்கை யவிதரத் தமதே நிறுத்திடும் வாதியர், அறமுதல் நான்கும் நன்குணர விரித்துரைக்கும் வாக்கியர், நாவலர் மகனார் நாவலர், தேசிகர் தனயர் தேசிகர், முப்பொருட் பொது வியல்பு சிறப்பியல்பு தேர்ந்து உருக்காட்சி சுத்தி வாய்ந்து உருவமூன்றும் திகழ்தரப்பெற்று இடையறாது ஆனந்தத் தழுந்திடும் சைவமுனிவர். நல் வேதாந்தத் திறப்பொரு டேர்ந்தவராதலிற் சிவதீக்கை செய்வித்தற் குரியர். இவரது குலத்தின

ஸ்ரீ

- வன்மீகநாததேசிகர் I
  - வைத்தியநாததேசிகர் I
    - சதாசிவதேசிகர் I
      - தியாகராஜதேசிகர் II
        - சதாசிவதேசிகர் II
          - தியாகராஜ தேசிகர் III
          - சுப்பிரமணிய தேசிகர்
          - சிதம்பரநாத தேசிகர் II
          - வன்மீகநாத தேசிகர் III
            - தியாகராஜதேசிகர் IV
              - ஆறுமுக தேசிகர்
              - வைத்தியநாத தேசிகர் IV
            - சூரியமூர்த்திதேசிகர்
              - ஷண்முக தேசிகர்
              - அன்னபூரணி
                - சுந்தரவல்லி
            - சதாசிவதேசிகர் III
              - (சிவஞான வன்மீக தேசிகர் IV)
              - சோமசுந்தர தேசிகர்
              - சுவாமிநாத தேசிகர்
              - துரைசாமி தேசிகர்
            - முத்துக்குமாரசுவாமிதேசிகர்
          - வைத்தியநாத தேசிகர் III
          - மாசிலாமணி தேசிகர்
    - தியாகராஜதேசிகர் I
      - வைத்தியநாததேசிகர் II
    - சிதம்பரநாததேசிகர் I
    - வடுகநாததேசிகர்
    - வன்மீகநாததேசிகர் II

(சிவஞானதேசிகர் என்கிற வன்மீகநாததேசிகர் IV)

ரியாவரும் கல்வியிற் பெருமக்களும் பெருமக்களாற் பெரிதும் புகழ்ப்பரிசு பெற்ருேருமாவர். இன்னூர் மரபட்டவணை:—

இவ் வடைவினருள் வைத்தியநாத தேசிகர் I இலக்கண விளக்கம், நல்லூர்ப்புராணம், பிராயச்சித்த சமுச்சயம், திருவாரூர்ப்பன்மணிமாலை, மயிலம் பிள்ளைத்தமிழ், பாசவதை பரணி இன்னோரன்னவற்றையும் தியாகராஜதேசிகர் I பாட்டியல், சிவாகசியம் ஒன்பதாமத்தியாயம் ஆதியவற்றையும், இந்நூலாசிரியர் தாமும் இத்தசகாரியம், வில்லிவாக்கப் புராணம், பதிபசுபாசப்பனுவலுரை, சிவஞானசித்தியார் பொழிப்புரை முதலியவற்றையும் வடுகநாததேசிகர் திருமுல்லைவாயிற்புராணத்தையும், தியாகராஜ தேசிகர் II தேவையந்தாதி, காழியந்தாதி, கோவை, உலா, திருக்கூட்டசதகம், அன்பர் போற்றிக்கலிவெண்பா, என்றற்றொடக்கத்தனவற்றையும், வைத்தியநாத தேசிகர் II பதிகச்செய்யுளையும், சதாசிவதேசிகர் III திருவாரூர்ப்புராணவசனத்தையும் இயற்றியருளினர்கள். தியாகராஜதேசிகர் II பதிகச் செய்யுளையும் திருமுல்லைவாயிற் புராணத்தையும் வரைந்தனரென்று இலக்கணவிளக்கப் பதிப்புரையில் தாமோதரம் பிள்ளையவர்கள் கூறுவர். வைத்தியநாத தேசிகர் I பொம்மபுர ஆதீனத்து எம் குடிமுதல் சிவஞான பாலையசுவாமிகளாற் பரணிபொருட்டும் பிள்ளைத்தமிழ் பொருட்டும் சூனம்பேட்டை மானியமும், உப்பளமும், மலையாளத்தாசராற் பலகிராமங்களும் சன்மானங்களும், தியாகராஜதேசிகர் II இராமநாதபுரச் சம்ஸ்தான மந்திரி தாமோதரப்பிள்ளையாற் சூரியங்கோட்டைக் கிராமமும் விஜய அருணசல வணங்காமுடியாரால் தமதுபேரிற் பாடிய கோவையுலாக்களின் பொருட்டுத் தண்டிகைவரிசையும், மறவனேந்தல் முதல் மூன்று கிராமமும் பரிசுபெற்று மிகச் சிறப்புற்றிருந்தனர்கள். சூனம்பேட்டை மானியமும் அளமும் மூலபுருடர் வன்மீகநாத தேசிகருக்குக் கிடைத்தனவென்று ஆதாரமின்றியுரைப்பர் தாமோதரம் பிள்ளையவர்கள். இவ்வமிசோற்பவரை அந்தகக்கவி வீரராகவமுதலியார், படிக்காசுப்புலவர்,

இலக்கணம் அம்பலவாணத் தம்பிரானுருள்ளிட்டார் வியப்புற்று வியந்து கொண்டாடியுளர்.

இந்நூலாசிரியர் தம்மொடு கற்றோர் மேற்குறித்த படிக்காசுப்புலவரும், நடுநாட்டு மாதைத் திருவேங்கடநாதரு மாவர். இவர்காலத்து வசித்தகவிஞர், மேற்கண்ட புலவர் சிகாமணிகளும், அமிர்தகவிராயரும், இராகவானந்த யோகிகளும், எங்குடி முதல்வர்களாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், சிவஞானபாலையர், சாந்தலிங்க சுவாமிகள் ஆவர்.

"இராமநாதபுரத்தில் கி. பி. கசுஅ௫-ம் ஆண்டுமுதல் களஉ௩-ம் ஆண்டுவரையும் அரசுபுரிந்த இரகுநாத சேதுபதியின் சமஸ்தான வித்துவானுன படிக்காசுப்புலவர் இந்நூலாசிரியரிடம் (வைத்தியநாத தேசிகர் I. இலக்கணவிளக்கம்) கல்வி கற்றவராதலானுஞ், சற்றேறக்குறைய கஅ௰ வருஷத்தின் முன் நன்னூல் விருத்தியுரை இயற்றிய சங்கர நமச்சிவாயப் புலவரது இயற்றமிழாசிரியராகிய சாமிநாத தேசிகர் இவர் (வைத்) காலத்துச் சிறுவயதினரா யிருந்தமையானும், இவர் (இந்நூலாசிரியர் பிதா) காலம் இற்றைக்கு (விரோதிஞு கி. பி. கஅ௪கூ) உ௫௰ வருஷத்தின் முன் னென்பது போதரும்" எனத் தாபித்தனர் தாமோதரம் பிள்ளையவர்கள் (பதிப்புரை-பக், உ) ஆதலின், இற்றைக்குச் சுமார் உ௬௫ வருடமாகும். அன்றியும் சிவஞான பாலையர் சிவப்பிரகாச சுவாமிகள் காலத்தவர், இச்சுவாமிகள் எங்குடி முழுதாளும் அல்லமதேவரது சரித்திரத்தை பிரபுலிங்கலீலையென முதனூற்பெயரான் மொழிபெயர்த்த அப்தம் 'பார்கெழு சகாத்த மூவைஞ்ஞூற்றெழுபானுன்காவ தாகிய கரநாமங்கொள் ஆண்டு' (கி. பி. 1652) ஆதலின் இற்றைக்குச் சுமார் 262 வருடமாகும். மேலும் மாதைத் திருவேங்கடநாதர் மதுரையில் ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கருக்கு மந்திரியாய் கி. பி. 1682-ம்ஞு முதல் திருநெல்வேலியில் இராஜப் பிரதிநிதியாய் மங்கம்மை தம்பேரர் விஜயரங்க சொக்கலிங்க நாயக்கருக்கு அரசியலை ஒப்புவித்த கி. பி. 1705.ம்ஞு வரையும் ஆட்சி புரிந்தனர்.

இவர் மந்திரியாவதற்கு முன் கடந்த பருவம் 30 ஆட்டைய தாகக் கொள்ளின் இற்றைக்குச் சுமார் 262 வருடமாகும். ஆகவே இவரது காலமும் அத்துணைத்தெனத் துணியப்படும்.

## 2. நூல் திறன்.

இந்நூல் அநாதிமுத்த முதல்வன் அநாதிபெத்த ஆன்மாக் களின்பொருட்டு அநாதியே திருவாய்மலர்ந்தருளிய வேதத் தை மூலமாகக்கொண்ட சிவாகம பூதசார ஞானசாத்திரப் பகுதியாயது. சித்தாந்த ஞானபாதச் சிறப்பதிகாரத்துட் கண்ட சாதனம் பயன் என்பவற்றுக் கூறப்பட்ட பத்தவ தாரமும் இத் தசகாரியமாம். ஞான பாதத்திலே தின்ன விடத் தமையுமெனத் திராவிட மாபாடியகாரர் கூறியுளா ராண்டுணர்க. திருநெறித் தமிழ்முறை பன்னிரண்டின் கருத் தும் மெய்கண்ட சாத்திரம், பண்டார சாத்திரங்களின் கொளு வும் இவ்வுறுதிப் பொருளனவேயாம். இனி இவை திருவருட் பெருஞ்செல்வர்களாகிய சமயகுரவர் நால்வர்கள் அனுபவித் தவை, விவேகாதி சர்வசாதன சம்பந்நர்களாகிய ஏனை நாயன் மார்கள் நுகர்ந்தவை, நிஷ்காமாதிகாரிகளாகிய ஒன்பதின்மர் துய்த்தவை, ஞானதான வள்ளல்களாகிய சந்தானாசாரியர் திளைத்தவை, துறவறத்தவராஜ சிங்கமாகிய பட்டினத்தடிகள் அயின்றவை, நின்மல நிஷ்டானுபூதிப் பெரியோர்களாகிய, தாயுமானவசுவாமிக ளாதியர் ஆர்ந்தவை, இப்பொருளின் பகுதியனவாகிய பத்தவதாரத்தையும் பற்றிச் சிந்நாந்நசாபங் கூறுமாறு:—

தத்துவரூபம்.—பிருதிவி முதல் நாதமீறான முப்பத் தாறு தத்துவங்கள் தனுவும், கரணமும், புவனமும் போக மும் செயலும் பிரேரகமுமாய் நின்ற பெருவடிவைத் தனக்கு வேறாகக் காணுமவதரம்.

தத்துவதரிசனம்.—பிருதிவிமுதல் நாதமீறான முப்பத் தாறு தத்துவங்களைச் சுத்தமாயா அசுத்தமாயா மலங்களின் காரியமென்றும், சடபதார்த்தங்களென்றும், தன்னாலே யறி யப்பட்டன வென்றுந் தன்னறிவிலே விளங்கக் காணுமவதரம்.

தத்துவசுத்தி.—பிருதிவிமுதல் நாதமீறான முப்பத்தாறு தத்துவங்களினது விகற்பமாகிய சுட்டறிவுகளிற்றா னில்லாமல் தத்துவங்கள் தன்னைத் தாக்காமல் கானலைத் தண்ணீ ரென்று கண்டவுடன் கானலென்றறிந்த விடத்துத் திரும்ப விரும்பாதது போலவும் சொப்பனத்தில் யானை யேறி மாலை சூடக்கண்டவன் விழித்த விடத்தது மெய்யாகக் காணாமல் பொய்யாகக் கண்டது போலவும், தன்னறிவிலே கண்டு நீங்கித் தானசைவின்றி யன்னியனா யெங்குநிறைவாய் நித்தியமா யறிவாயுள்ள முறைமையை யறிந்து நின்றவவதரம்.

ஆன்மரூபம்.—தேசிக மூர்த்தியினுடைய அனுக்கிரகத்தினால் தன்னையுந் தன்னிடத்திலே பந்தமாயிருக்கிற தத்துவ விவகாரங்களையு மெவ்விடத்திலுந் தோன்றாமல் சகசமாய் மறைந்து நின்ற வாணவமலத்தினையு நீங்கித் தானறியு முறைமையும் அவனுடைய ஞானமறிவுக் கறிவாய் நின்று பகரிக்கிற முறைமையுந் தன்னறிவிலே விளங்கக்காணு மவதரம்.

ஆன்ம தரிசனம்.—ஆன்ம செய்தி யெவ்விடத்திலுந் தோன்றாமல் தத்துவதாத்திகங்களை யெனதென்றும், பசு ஞானத்தினையானென்றும் நின்ற வசத்திய போத நீங்கிப் பழைய சிற்றறிவாகிய சுட்டுப் போதங்கழன்று ,, நின்ற வவதரம்.

ஆன்மசுத்தி.—தனக்கெனச் செய்தியில்லாத வான்மா தன்னுடைய சுட்டறிவு எவ்விடத்திலுந் தோன்றாமல் கெட்டுத் தன்னிடத்திலே விளக்கப்பட்ட வனுக்கிரகத்தினாலே தற்பூரண மெல்லாமடங்கித் தன்னுடைய செய்தியெல்லா மனுக்கிரகத்தினது செய்தியாய்த் தன்னை யந்தஞான மடக்கின முறைமையும், தானந்த ஞானத்திலே யடங்கின முறைமையும் எவ்விடத்திலுந் தோன்றாமல் பெத்தத்தினாலே தேகமே தானாயுந் தானே தேகமாகியு நின்ற முறைமைபோல முதல்வனே தானாய் நின்ற வவதரம்.

பாரூபம்.—சடசித்துகளாகிய தாபர சங்கமங்களுளெல்

லாந் தான் வேறறநின்று பெருமை பொருந்தியிருக்கப்பட்ட காருண்ணிய சத்தியே தனக்குத் திருமேனியாகி ஆணவமலஞ் சகசமாயிருக்கப்பட்ட வான்மாக்கள் பாகபேதங்களைத் திருவுள்ளத்தடைந்து தனதிச்சாஞானக் கிரியையின் செய்தியாகிய மாயாதத்துவங்களினுல் சிருட்டித்துந் திதித்துஞ் சங்கரித்தும் மலபாக வொழிவிலே யிந்ததத்துவங்கள் வேறும்படிக்குச் சத்திநிபாதத்தை விளைவித்துச் சத்திநிபாதத்தின் வழியிலே புறம்பே கட்புலனுக்குத் தோன்ற மானிடச்சட்டை சாத்தி யெழுந்தருளி வந்து தான் வேறற நிற்கிற முறைமையைத் தருகின்றவன் ஆன்மாக்களுக்கெல்லா மறிவிற்கறிவாயிருக்கிற முதல்வனே யென்று பிரதிக்கினை யேது திருட்டாந்தங்களினுலே மயக்க விகற்பமறத் தன்னறிவிலே விளங்கக் கண்டு நின்ற வவதரம்.

பாதரிசனம்.—ஆன்மாவென்ப தெவ்விடத்திலுந் தோன்றுமலென தென்றும் யானென்றும் நின்ற வசத்திய போத நீங்கத் தேசிக மூர்த்தியினுடைய அனுக்கிரக ஞானம் பிரகாசித்து நின்ற வவதரம் முதல்வனுடையபாதம்; தன்னை யுணர்த்தும் பகுதியாகத் தாக்குவதான விடய போகங்களை யவனவளதுவாய் நோக்குமிடமெல்லா மவனுடைய அனுக்கிரகத்தையே கண்டனுபவிக்கு மவதரம் முதல்வனுடைய திருமுகம்; அந்த வனுக்கிரகத்திலே தற்செயல் தோன்றுமல் பரவசப்படு மவதரம் முதல்வனுடைய திருமுடியா மென்றறிந்து இந்த வுண்மையினைச் சந்தேக விகற்பமற வுள்ளபடி விசாரித்தறிந்து, இதுவல்லாமற் சத்தியமாயுள்ள பொருள் வேறேயுமொன்றில்லை யென்று தெளிந்து எனதியானென்னும் விகற்பமாகிய பிருதிவி முதல் நாதமீறுகச் சொல்லப்பட்ட சகலாவத்தையிலும் பொருந்தாமல் இந்தக் கருவிகள் நீங்கினுற்றனக்குள்ள சகசநிலையாகிய கேவலாவத்தையிலும் பொருந்தாமல், இந்தக் கேவல சகலமிரண்டு நீங்கினவிடத்து விளங்குவதான போதபூரணமாகிய அகம்பிரம ஞானத்திலும் பொருந்தாமல் தேசிகமூர்த்தியினுடைய அனுக்கிரக ஞானத்

திலே தற்பூரணமெல்லா மடங்கித் தனது செய்தியெல்லா மவனதனுக்கிரகஞான சத்தியினுடைய செய்தியாய் அறிதற்கரிதாகிய மேலான பூரண வின்பந் தோன்றுமலேகதேச வியாபாரமாகிய தனுகரணாதி யின்பமே தோன்ற அந்த வின்பங்களையே மெய்யென் றனுபவித்து நின்ற முறைமை போலத் தனுகரணாதி யின்பமெவ்விடத்திலுந் தோன்றுமல் பூரண வின்பத் தொடர்ச்சியாகிய தேசிகமூர்த்தத்தினனுக்கிரக ஞானத்தினை யெவ்விடத்திலுங் கண்டனுபவிக்கு மவதரம்.

பரயோகம்.—சடசித்துக்களிரண்டினு நின்று விளங்குவதாகிய இதாகிதங்களுக் கேற்ற சத்தாதி விடயங்களிலே யெந்த விடயங்கள் வந்து தாக்கினாலும், அந்த விடயங்களை யெதிரிட்டுப்பார்த்து இதுமாயாகாரியமான தனுகரண புவன போகங்களினது விகற்பமென்று மிந்த விடயங்களினின்றும் விளங்குவதாகிய இதாகிதங்கள் கன்மத்தினது விகற்பமென் றுங் கண்டு தனக்கெனச்சற்றுஞ் செய்தியில்லாத சடரூபமாகையினாலே தானாகச்செய்தி-வறியாது, அந்தவிடயங்களையதுவது வாகப் புசிக்குமான்மாவை நித்தியனாய்ப் பூரணனா யறிவாயிருந்தாலும் தானாக வொன்றையு மறிதற் கறிவில்லை யென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து, அந்த ஆன்மாவினது அறிவுக்கறிவாய் நின்று இந்த விடய போகங்களை யிடைவிடாமற் பாகமறிந்துணர்த்தி நிற்கிற திருவருளையு முள்ளபடி தரிசித்து அந்த வருளினது நிறைவெல்லாந் தனது வடிவாகவுடைய பூரண வின்பமெனக் கண்டித்துக் குருமூர்த்தமா யெழுந்தருளி மானிடச் சட்டை தரித்து வந்துபதேசித்த வனுக்கிரகத்தை யுள்ளபடி தரிசித்து, இவ்விடத்திலே வந்து பொருந்தப்பட்ட சத்தாதி விடயங்களை யெல்லாமந்த வனுக்கிரகத்தினாலே பொருந்திப் பார்த்து, இந்த விடய போகங்களின் வழித்தாய்த் தீவினையைச் செய்விக்கிறது மனுக்கிரகமாகிய திருவருள்தானே, இந்த நன்மை தீமைகளை யறியும்படிக்குப் புசிப்பாகிவந்த

விடயபேதங்களு மவ்வனுக்கிரகமாகிய வருள்தானே யென்றுள்ளபடி தரிசித்து, இந்த முறைமையே யன்றிச் சித்தாகிய வான்ம வர்க்கத்திற்கும் சடமாகிய பாச சாலங்களுக்கு மொன்றை யொன்றறியவு மொன்றை யொன்று பொருந்தவு மொரு சற்றுஞ் செயலில்லையென்னு முறைமையை யுள்ளபடி தரிசித்து அந்தப்பொருளோ டிசைவதாகிய வவதரம்.

பரபோகம்.—எத்தகைய தொழில்களைச் செய்தாலும் தற்செய லெவ்விடத்திலுந் தோன்றாம லனுக்கிரகமாகிய வருணிறைவிலே வேறற நிற்கில் அந்த வருளுக்கு முதன்மையாகிய நேய மவனதறிவு பூரணமெல்லாந் தனது வடிவாகக் கொண்டு தானந்த வறிவு பூரணத்திற்கெல்லா முயிராய் இவனதறிவு தொழிலாகிய விந்திரிய போகங்களாய் வரும் புசிப்புந் தொழிலுந் தனது புசிப்புந் தொழிலுமாகவே புசித்துத் தொழிற்படும் நானாவிதமாகிய போகங்களையெல்லா மிவனுக்குத் தனது பூரணவின்பமாகிய நேயவடிவாகவே காட்டி இவனதறிவு பூரணமெல்லாந் தனதின்பப் பூரணமாகவும் தனதின்பப் பூரணமெல்லா மிவனதறிவு பூரணமாகவும் வேறறத்தோன்றி நின்று தனதின்ப நிறைவெல்லா மிவனதனுபோக பூரணத்தை யமிழ்த்தி நிற்குமவதரம்.

'ஆடவ ரரிவையர் தம்மின், மிக்க வந்தரங் கத்தவர்பெற்ற, இன்பமு முரையில தததனு, லந்த ரங்கமன் மைந்தமல் பறியே' (ஞான 65) என வுரைப்பக்கிடந்த இவ்வசாத்தியச் சாத்தியப் பொருளைக்கூறப் புகுந்தார் இக்கிரந்த கர்த்தா. இவரை யன்றி இத்தசகாரிய நூலியற்றினோர் திருவாவடுதுறை யாதீனத்துப் பிரதமாசிரியருக்குப் பின்வந்த அம்பலவாண தேசிகர், துவிதிய தக்ஷிணாமூர்த்தி தேசிகர், திருவண்ணாமலையிற் பரிபூரணமுற்ற ஈசான மடாலயத்து இலக்கணக்கொத்துச் சாமிநாத தேசிகர் என்பார் மூவர் அந்நூல்களுட் சில பாசுரம் இவ்விடத்து வரைவல்.

## அம்பலவாண தேசிகர்.

அனைத்தையுந் துறந்தோ மிந்நா
ளியாவர்க்கு மேலா மென்ன
நினைத்திட லுயிர்க்கு ரூப
நீடுநெ நாள தாகச்
செனித்தனை நரகி னின்றுந்
திளைத்தனை தெளிந்து சற்று
முனைத்தனி நினைந்த தில்லை
யுறுஞ்செய லருள தென்றோர்.

## தக்ஷிணாமூர்த்தி தேசிகர்.

சற்குருவி னருளாலுந் தவமுடிவின்
பயனாலுஞ் சனன நீங்கிச்
சிற்கனவாழ் வடைந்ததற்கே சிந்தைசெயுந்
திறமுடைய சீல ராகி
நிற்குநிலை சாதனங்க ளொருநான்கு
மாசறவே நீந்தி யோக
வர்க்கமொடு சகலகலை யுந்தெரிந்து
ஞானநெறி வருவ ராமால்.

## திருவண்ணாமலையார்.

தத்துவ மனைத்து நோக்கித்
தனித்தனிச் செயல்கள் காண்ட
லொத்ததன் னுருவ மாகு
மொன்றையொன் றுணரா தீது
சத்தியஞ் சடமே யென்னத்
தானறிந் திடுதல் காட்சி
நித்திய மன்று சின்னா
ணீங்குத லென்றல் சுத்தி.

இத் திருநூல்களுக்கு ஆதாரமாகிய முதற் றமிழ்நூல் உண்மைநெறி விளக்கம். இஃது ஆறு திருவிருத்தங்களால் கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனாரால் தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசித்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகமென்னும் தசகாரியங்களை விளக்குதற்கெழுந்தது.

இனி நமது தசகாரியநூல் காப்புளப்படப் பாயிரமுதல் சிவபோகமீறாப் பதினேழு அத்தியாயங்களையும் ௩௱௨ திருவிருத்தங்களையும் கொண்டது. இதன் பெருமை யாவும் பிரம்மஸ்ரீ டாக்டர் வை. வே. ரமண சாஸ்திரிகள் எம். ஏ, டி. பி. எச், அவர்கள் செவ்வியவுன விரிவாக இந்நூல் ஆங்கில முகவுரையிற் கூறி இருத்தலின் விரிவஞ்சிவிடுத்தேன். இனி இந்நூலின் அருமையும் என் சிறுமையும் பாராது இதற்குப் பாயிரங் கூறுவான் புகுந்த என் குற்றத்தைப் பொறுத்தருளும்படி ஈண்டுப் பெரியோர்களைப் பிரார்த்திக்கின்றேன்.

## 3. பதிப்பித்தோன் திறன்.

இதனைக் கூறுமுன், இந்நூலாசிரியர் குலத்தினவர் வசித்த இடத்தைச் சற்று கவனித்தல்வேண்டும். ஸ்ரீ வன்மீகநாத தேசிகர் Iம், அவர் பின்னோரும். அவர் தனயர் சதாசிவ தேசிகர் I தியாகராஜ தேசிகர் II-ம் திருவாரூரின் கண்ணும், சிதம்பரநாத தேசிகர் I-ம், வன்மீகநாத தேசிகர் III-ம் குளம்பேட்டையிலும், வடுகநாத தேசிகர் சீகாழியிலும், தியாகராஜ தேசிகர் III சூரியங்கோட்டையிலும், சிதம்பரநாத தேசிகரை II யுள்ளிட்டார் மணிவிளான் வயலிலும், சூரியமூர்த்தி தேசிகர் திருக்களரூரிலும், சதாசிவ தேசிகர் III திருவாரூரிலும் வசித்தனர். கடையிற் கூறிய தேசிகோத்தமர் திருத்தணிகைச் சரவணப் பெருமாளையரிடத்தும், கீழ்வேளூர்ச் சுப்பிரமணிய தேசிகரிடத்தும் கல்விபயின்று தருமபுர வாதீனத்து மகாலிங்கக்குட்டி யென்னும் மாணிக்கவாசக தேசிகருக்குச் செந்தமிழ்ப் போதகாசிரியராகியும், நியாய சாஸ்திர பரிக்ஷையிற்

நேர்ச்சியடைந்து தரங்கம்பாடியில் நியாயஸ்தல நியாயவாதி அலுவல் பார்த்தும் வந்தார். அக்காலத்துத் தமக்கு ஆண்மக வின்மையின் சிவஞான பாலைய சுவாமிகளை வேண்ட அம் மகானது அனுக்கிரகத்தாற் சிவஞான வன்மீகத்தேசிகரென் னும் ஜேஷ்ட புத்திரர் உதித்தார். அவர் பின்னோர் சோமசுந் தர தேசிகரே இந்நூலைப் பரிசோதித்து அச்சிற் பதிப்பித் தோர். வமிசாவலியிற்கண்ட சுந்தரவல்லியென்னும் மாது சிரோன்மணியின் கேள்வர். திருவாரூர்ப் பன்மணிமாலையை அச்சிடுவித்தவர். இந்நூலைப்போலவே இக்குடும்பத்தினரது நூல்கள் பலவற்றையும் விசேடமாகத் திருமுல்லைவாயிற் புராணத்தையும் பிரசுரிக்க விருப்பமுள்ளவர். அவரது பெருந் தகுதியையும் அன்புடைமையையும் எக்காலும் எண்ணியிருத் தலையன்றி அவருக்கு நம்மாற் செய்யப்படும் கைம்மாறு யாது?

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

இந்நூல் இந்நிலவுலகினருக்குப் பெரும்பயன் புரியுமாறு திருவருள் சுரக்கும்படி எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளாகிய திருச்சிற்றம்பல முடையான் திருவடித் தாமரைகளை மன மொழி மெய்களால் வணங்குகின்றேன்.

பாடாண்-புகழ்ந்தனர் பரவல்.

மாதர் பிறைக்கண்ணி வானதி தோய்சடில
போதமர் நின்னடி போற்றுதுங்—காதல்
விரவுநீர் ஞாலத்து வெவ்வினை நீங்கி
யுரவுநீர் கோடற் குவந்து.

| | |
|---|---|
| தருமசம்வர்த்தனி விலாஸ்<br>தரங்கம்பாடி,<br>பிரமாதிச ஸூ<br>சாபரவி 28உ<br>ஆதித்தவாரம் திருவாதிரை | ப. அ. முத்துத்தாண்டவராயன். |

# சூசிபத்திரம்.

## சிறப்புப்பாயிரம்.



மலர்தலை யுலகின் மல்கிரு ளலகப்
பலகதிர் பரப்பும் பரிதியே போலப்
பல்வகைச் சமயத்தினு யரியசமயந்
திங்க டங்கிய பொன்னெடுஞ் சடிலனை
வழிபடுவஃ்த மெய்யென் றுரைக்கு
மாகம மதனை யையந் திரிபற
வோதி யுணர்ந்த மெய்யன் புடையான்
மூப்பழ கால்முதிர் திருவந்திக்
காப்பழகிசைந்த கமலைத் தியாகர்
மலைமக டன்னொடு மகனெனும் வேளொடு
மரியணை மிசையே யமருமா ரூரில்
வன்மீக நாத யாதவன் வரத்தால்
வந்தருள் செல்வன் வைத்திய நாதன்
குமாரரி லிளைய குமாரனே யாகுஞ்
சிதம்பர நாத தேசிகோத் தமன்று
ணுரைத்தனன் றசகா ரியமெனு நூலே.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# தசகாரியம்.

## காப்பு.

உழிதர வியைந்த காய வோங்கலிற் காம மாதி
கழிபெருங் கதிரெ ரிப்பக் கனன்றுளம் வருந்து வேனை
வழிமது வொழுகுந் தண்டா மரையடி நீழல் சேர்க்கும்
பொழிமதக்கலுழிநால்வாய்ப்பொருப்பினை விருப்பஞ்செய்வாம்.

## பாயிரம்.

### சிவம்.

சீராரும்பேரண்ட மௌலியாகச் சிறந்தசுடரொருமூன்று நயன
மாக,வோராருந் திசையெட்டுங் கரங்க ளாக வேழ்தலத்தின்
மாசுணங்க டாள்க ளாகப், பாராரு முயிர்களுள மரங்க மாகப்
பரமுத்திக் கானதொழி னடனம் பண்ணிக், காராரு மலமாதி
யறிஞர் நல்கக்கண்டெளிகூ ரரனைக் கருத்துள் வைப்பாம். (உ)

### சத்தி.

இலயமுத லானதொழிலமலனேவ
விறையுருவாம்விந்துவிடை யியற்றித்தானு
மலையாதே யநந்தாதி யீசர்க்குள்ள
வறிவுதொழின் முழுதினையுமளித்துப் பின்னைக்
கலையாதி மாயையினைக் கலக்கி யாக்கிக்
கரியமல மாயைவினை கழித்து நாளுந்
தலையானவானந்த முயிர்கட் கீயுஞ்
சாம்பவிதாட் கமலமலர் தலைமேல் வைப்பாம். (ங.)

## மற்றைத் தெய்வங்கள்.

எண்ணரிய வுயிர்கள்வினைப் பிறவி நீங்கி
யியல்பாகும் பேரின்ப மெய்த நல்குங்
கண்ணுதன்மெய் வடிவான கருணைஞானக்
கனங்குழையைப் புணரவருங்களிற்றை வாழ்த்தி
நுண்ணியநூ லகத்தியனுக்குரைக்கு முண்மை
நோன்மைவடி வேலவனை யுளத்தே நோக்கிப்
புண்ணியமே வடிவான நந்தி சாதி
பொருவிலருட் குரவரையும் போற்று வாமே. (௪)

## சத்தியஞான தரிசினிகள்.

ஒருரும் பேரும்வடிவொன்று மில்லா
னுன்மனையினந்தியத்தி னுறைதலின்றிக்
காருரு மலங்கரும மாயை நீங்கிக்
கண்டுயிர்க டம்துகுணங் களிப்ப நாளும்
பேருருந் திருவுருவுங்கொண்டு பூவிற்
பேசுபுகழ்ச் சிவபுரத்தில் வந்தபெம்மான்
பாரோர்கள் புகழவருஞ் சத்திய ஞானி
பதமலர்களிதையமுறப் பணிதல் செய்வாம். (௫)

## குருவணக்கம்.

ஏர்திகழுந் தத்துவத்தி னுருவ மாதி
யியம்பவுயி ரெழுபிறப்பு முயங்காதெண்ணிக்
கார்திகழுங் கந்தரமுங் கங்கை யாறுங்
கண்ணுதலும் பெண்ணிடமுங் கரந்து மாக்கள்
சார்புகொடு வந்தருளி யெம்மை யாண்ட
சந்திரசே கரன்கமலத் தாள்கள் போற்றிச்
சீர்திகழு மாகமநூற் படியே யுண்மை
தெருண்டவர் பதமலர்கள் சிந்தைசெய்வாம். (௬)

## அவையடக்கம்.

அனுதிமல மாயைமுத லான வெல்லா
மன்னுயிரை நீங்கியிடா தமர்ந்த வேனு
மெனுதிதுக ளினைநீக்கி யதனைச் சேர்ந்த
வெண்குணத்தாற் கைக்கொள்ளு மியல்பே யென்ன
வினுதவுரைக் குற்றமறுத் தென்னையாளு
மிருந்தவர்க ளிந்நூலை யெடுத்துக்கொள்வர்
மனுதியினுக் கெட்டாதவமலன் கூறும்
வடகலையின் பொருளிதனின் மருவ லாலே. (௪)

## நூல் செய்தற்குக்காரணம்.

திருவாருங் காமிகமே யாதி முன்னஞ்
செப்புதச காரியத்தி னுட்ப மெல்லாங்
குருவாலே யுணர்ந்தவற்றைக் கோவை செய்து
குவலயத்தி லாகமநூல் கல்லா மாந்த
ரருவான மாயைமுத லான வெல்லா
மகன்றுதம தறுகுணமா ஞானு நந்தப்
பெருவாழ்வு பெறத்தமிழின் செய்யு ளாக்கிப்
பேசுவன் கேளாசகலப் பிறப்பற் றுயே. (௫)

## பாயிரமுற்றும்.



## தேசகால பாத்திர விலக்கணம்.

ஐயிரு பகுதி யான வாகமப் பொருளைக் கூறும்
மையறு தானம் யாது வாய்த்தநற் காலம் யாது
சைவரில் யாவர் கேட்குந் தகுதிய ரென்று சாற்றத்
தெய்வமா முனிவர் போற்றுஞ் செழுந்தவக் குரிசில் செப்பும்.
மதிதவழ் குடுமித் தெய்வ மகேந்திர மலையம் விந்தம்
விதியரி யானு மேவு மேருமந் தரமே ஞான
யதிமுனி வரர்சூழ் பாரி யாத்திரம் பருப்ப தாதி
கதிதரு மலைய னைத்துங் கழறிட மாகு மன்றே. (௨)

சுத்த வெண்டிரைசுருட்டிச்சுடர்மணி வரன்றி யெங்குந்
தத்து நீம்புனல்பாய்கங்கைத்தடத்தினில்யமுனை யாற்றி
னித்திலமணிகொழிக்குநிருமதையதனிற்றுங்க
பத்திரையதனிற்றெய்வப்பரநதிக்கூலந்தன்னில் (ரு)

பூந்துணர்ப்பொதும்பர்சூழும்புண்ணியப்பொன்னியாற்றிற்
சாந்தமுந் தென்றற் கன்றுந் தமிழொடுந் தயங்குமோங்கல்
வேந்தனு முனிகொணர்ந்த விரிதிரைப் பொருனையாற்றிற்
கூர்ந்தமா தவத்தோர் போற்றுங் குமரிமா நதிதீ ரத்தும். (சு)

கடுவொடுங்கெயிற்றுத் துத்திக் கட்செவிப்பகுவாய்ப்பாந்தண்
முடிமிசைக் கிடந்த ஞால முதுமக ளிதைபப் பூவின்
வடிமது வனைய காசி மாநக ராதி யாய
பொடியணிமேனிப்புத்தேள்பொருந்துநற்பதியனைத்தும். (ரு)

நாமநீராழி புல்லு நதிப்பெருங் கரையிற்றாய
வேமமா ரோடைத்தீரத் திணை மலர்நந்த னத்துஞ்
சேமமார் பான்மரத்தின் றிருப லி நீழறன்னிற்
காமனு ருடல்பொடித்த கண்ணுத லால யத்தும். (சு)

இருண்மல வலிதொலைக்கு மிருந்தவர்மடத்தும்பத்தர்
திருவளர் மந்திரத்தும் தேசிகர் மனத்துக் கேற்ற
குருவள ரிடத்து மிந்நூல் கூறலா மென்று தெய்வ
மருவளர் குமுதச் செவ்வாய் மலைமகட்கிறைவன் சாற்றும். (எ)

சாற்றுமித் தலத்துதக்கிற் சார்ந்திடிலிரவி யிந்து
கீற்றிளம் பருவமாகிக் கிளர்தரு முதற்பக் கத்தி
லேற்றநற் றினமே கால மியம்புகா ரகங்கண்மூன்றி
னூற்றமார் சாம்ப வத்தை யுறுமவர் கேட்கு நீரார். (அ)

தேசகால பாத்திர விலக்கண முற்றும்.

ஆகத்திரு விருத்தம். கரு.

—○:✻:○—

## சீடனிலக்கணம்.

விற்பொலி நுதற்சிறிய மின்னிடையோர் பாக
வற்புதநல் லாகம மனைத்துமருள் செய்த
சிற்பரம மூவகைய தீக்கையினி லாக்கை
யுற்பவமில் சாம்பவ முரைத்திடுக வென்ன, (௧)

### வேறு.

அறிதவ சாம்பவத்தை யறைகுவன் கேள்வி சிட்ட
நெறிதரு ஞானநல்கு நீர்மையாற் றொன்றுதொட்ட
வுறவறு தீக்கைக்கெல்லா முத்தமமா தலாலே
மறுவில்விஞ் ஞானதீக்கை யாமென மதிப்பர் மேலோர். (௨)

அற்றவா சமயமாதியாவண மியற்றுங்காலைச்
சொற்றரு மனுக்க ளேனந் தொழிலிடை விட்ட தூன
முற்ற பாவனையி லூன மொழித்திடு மாத லாலே
பற்றறு தவத்தோ யீது பவித்திர மவைகட் கெல்லாம். (௩)

கழிவரும் பத்தி யுள்ளான் கருணையா ரியனைக் கண்ட
பொழுதவன் மேனி யெல்லாம் புளகம்வந் திடவு ரோமம்
விழிமழை பொழியக் கம்ப மேவிட மூர்ச்சித்தாங்கு (௪)
வழுவறுங் குரவன் கூறும் வார்த்தையிற் செவிவைத் துள்ளான்.

அந்தவாய் மொழிநி னைந்தே யகத்தினின் மகிழ்ச்சிபொங்கப்
பந்தமில் குரவ னிட்ட பணிசுக துக்க மேனுஞ்
சிந்தனை யொருப்பா டுற்றுச்செய்துமண் மகன்ற னூழி
வந்திடும் புதுமண்போற்றன் வசமறவொழுகுவானே. (௫)

சுடரொளிமணிச்செஞ்சூட்டுத் துளையெயிற்றலையெயிற்றுப்
படவர விடையிற்றீவாய்ப் பல்பொறிப் புலிக்கு ழாத்துட்
கடல்வயின்மணிகொ ழிக்குங் கங்கையின் வீழ்கென்று லு
மடல்புனை குரவன்கூறு மருண்மொழி மறுத்துசெய்வான். (௬)

அளவறுபொருள்களெல்லா மாழிநீருய்த்துச் சிந்தந்
தளர்தலை யொழித்துநம்மைச் சார்திநீ யென்னிற் சார்ந்து
மிளமகன் றந்தை தாய ரிலமுடன் பிறந்தார்மற்று
முளபல கிளைகளெல்லா மொழித்திநீ யெனிலொழித்தும். (௭)

விட்டநின் கிளைஞரோடே மீளவுங்கூடென்றோதி
லிட்டமாயவரோ டொன்றி யிரண்டறவொழுகுவானே
சிட்டனுஞ் சம்புவாற்செய்தீக்கையைப் பரிக்கவின்றே
மட்டவி ழிதழித் தாரான் வகுத்தவா கமங்கள் கூறும். (அ)

சீடனிலக்கணமுற்றும்.

ஆகத் திருவிருத்தம். உச.

சற்குரு விலக்கணம்.

என்றுநற் குரவன் கூற விருந்தமா ணக்கன் றானு
நன்றிதுமொழிந்தாய் தெய்வ ஞானதே சிகன்றனுண்மை
யின்றெனக் கருளவேண்டுமென்று முன்பணிந் தெழுந்து
நின்றனனவனை நோக்கி நிமலனாக்கருளிச் செய்வான். (க)

இருவிதமாகத் தீக்கை யியற்றுமெம் மிறைவன் றானு
மொருவித முயிரு ணின்றே யுளூற்றுமா தார மின்றி
வருமல மலகன் மங்கண் மன்னிய விரண்டுபேர்க்குங்
குருவரு ளுருவ மாகிக் குயிற்றிடுஞ் சகலர்க் கென்றே. (உ)

கறையணற் கவைநாத் துத்திக் கட்செவிப் பகுவாய்ப் பாந்தட்
கிறைபஃ றலைதொட் டோடுமெறிதிரைக் கங்கை யாதி
குறையறு நதிதீரத்துக் கூறுநாற் குலத்திற் றோன்றிப்
பிறையணி மௌலிப் புத்தேள்பேசுநூ லனைத்துங் கற்றே (ங)

அழிதக ளுகுமுலோக வாயத ஞதிதிய
வழியுழன் மூடர்தம்மை மறுத்தறநிறுத்தித் தெய்வச்
சுழிபடுங் கங்கை யோடே சுடர்மதி மிலைச்சு மெங்கோன்
மொழிபெருஞ் சரியை யாதி முழுவதுமுணர்ந்துசெய்தே. (ச)

கொலைபுரியாமை யுண்மை கூறியே யுயிர்கட் கெல்லாந்
தலைதரு மருள்வைத் துள்ளான் சாந்தமும் பொறையும்பூண்டு
கலைநவில் வினைக்கீ டாகக் கலுழநிக் கிரகம் பண்ணி
யொலையநுக் கிரகஞ்செய்ய வோங்கிய சதிரு முள்ளான். (ரு)

சமயவா சாரத் தோடேசார்ந்துநற் செபந்தி யான
மமைதரு தவமோ மங்க ளர்ச்சனையாதி யெல்லா
மிமையள வதனிற் செய்தே யிறைவநூன் முறையினெல்லா
மமையமு மோதி யந்த வருத்தமே விசாரித் துள்ளான். (௬)

சிறந்தநற் குரவற் காளாய்ச் சேர்ந்துவிஞ் ஞான தீக்கை
யறக்கரைந் தெவற்கு முற்ற வரும்பிணி தவிர்க்க வெண்ணி
மறங்கடிந் திடம்ப நீங்கி மறந்துசெய் குத்திரங்க
டுறந்தவ ராகத் தோடே துயர்செயும் வெறுப்பு மற்றே. (௭)

குறிகொண் மாணுக்கர்குற்றங்குணமெலாமறிதற்கேற்ற
வறிவுநற் கிருபை சீல மற்புசந் துட்டமேவிப்
பிறிதராச் சிவாநுபூதி பெற்றுறுங் கயநோய்குட்டஞ்
செறிவுறா துடற்கணல்ல திருமலி யழகு முள்ளான். (௮)

மமதையாங் காரமையமதியினில் விகற்பந் தீய
தமமிவை தவிர்ந்தெந் நாளுஞ் சாத்திரமுணர்ந்தங்குள்ள
வமைதருபரமார்த்தத்தை யறிந்தவன் குரவனென்றே
யுமையொரு பாகத்தெங்கோனுரைத்தவாகமங்கள்கூறும். (௯)

செப்புமிக் குணத்திலொன்றுஞ் சேர்ந்திலனெனினுமுள்ளே
தப்பறு ஞான வாய்மைசார்ந்தவன்குரவ னவா
னப்பொழு தவன்றன் னோக்கா லானந்த மறிவிற் றோன்று
மொப்பருங் குரவன்றன்னை யுணர்ந்துநீ யணைந்திடாயே (௰)

அறம்பொரு ளின்பம் வீடு மளித்திடுங்குரவன்றன்னைச்
சிறந்திடவுணரி னின்னுட்டிரிமல யகல வானின்
புறம்பயிலிரவிகண்ட பொழுதகலிருள் போலன்னான்
றிறம்பயில் கரத்தாற் றீண்டிற் சிவவடி வாகு மெல்லாம். (௰௧)

உண்டியொ டுறக்கங்காம முறுபயனுடையனேனுங்
கண்டகப் புழற்காற்செய்ப கனகமா திறப்பொ குட்டு
முண்டகத்திலைநீர் தோய்ந்து முயங்கிடா ததுபோற்கன்மம்
விண்டிடுமொதலாலே விமலனே குரவனென்றாம், (௰௨)

அவன்மனே விமலயாகு மருளினு லவமிறீக்கை
பவமுறு நூறுகோடி பாதகர்க் கியற்றினுலுஞ்
சிவனருள் ஞானமுள்ளே செறிந்திடு மாகின் ஞால
வுவமையி னெறியினின்றே யொன்றுவனுண்மையாமே. (௰௩)

சற்குரு விலக்கணமுற்றும்.
ஆகத் திருவிருத்தம். ௩௭.

—oo:o:oo—

## அசற்குரு விலக்கணம்.

ஞானமில் குரவற்சேர்ந்து நணுகுவராயின்முத்தி
யூனமில் சிலையையூன்றி யொருசிலகரையிலேறு
மீனமில் ஞானமின்றி யியைந்தவன் குருத்து வத்தை
யானதோர் நரகமெல்லா மடைந்திடு மறிந்து கொள்ளே. (௧)

எவன்குரு வழியின் ஞான மிலாமலே குரவனுகு
மவனென்னை மணலி லூற்று மருந்தேபே ராகாயத்தைப்
பவமுறு பசிநோய்தீர்க்கும் பதம்புனலெள்ளொன்றின்றிச்
சிவசிவ வவன்ற னுள்ளத் திடத்தையார் செப்பு வாரே. (௨)

சாற்றுநூ லறிவொன் றில்லான் சமையவா சார மில்லா
னேற்றதோர் குலமுமில்லா னியம்பு மாச்சிரமுமில்லா
னாற்றல்சேர் காமமாதி யறுகுண மனைத்துமுள்ளான்
பாற்று மேடணைமூன்றேமே பழுதுறு சீல முள்ளான். (௩)

குற்சிதமனமுமுள்ளான் குணமொரு சற்றுமில்லான்
நச்சியே யிழிஞர்மாட்டு நவையுறுபொருள்கை யேற்பான்
எச்சமில் மந்திரங்கள் எழில்பெறு தந்திரங்கள் [லான் (௪)
பொச்சமெய்ஞ் ஞானயோகம் பொருந்தைந்து தீக்கையில்

ஆசையும் வெறுப்புமுற்றே வழகுற வலங்கரிக்கும்
பூசையு மிடம்பத் தாலே புறமுறநடித்துச்செய்யு
மாசுசேர் குத்தி ரத்தால் வயிற்றுறு பசிநோய் மாற்றக்
கூசிடா னுகியார்க்குங்குருக்கொடுந்துழலு வானே. (௫)

இப்படிப் பட்ட வாசா னியற்றிய தீக்கை பெற்ற
செப்பமில் புதல்வர் தாமுந் திளைப்பரே நரக மெல்லா
மைப்படி குருடன் றன்னை மற்றொரு குருடன் பற்றி
யொப்பறு நெறியைக் காணா துழலுமா போல வோய்ந்தே.(௬)

அசற்குரு விலக்கணமுற்றும்.

---

ஆகத் திருவிருந்தம். ௨௩.

குருபூசை.

ஆதலான் முன்னஞ்சொன்ன வறிவுறுகுரவர்க்காளாய்
மாதவ வுபதேசங்கொண்மற்றது கேட்டிமுன்ன
மோதிய தலத்திற்சென்றே யுஞற்றிமுன்பூபறிக்கை
தீதறு மண்ட பத்தைச் செய்து நாற் றுவாரத் தோடும். (௧)

அதனிடை நான்முழத்தினமைத்துவே திகையை யானின்
புதிய நன்மயங் கரைத்த புனலினுன் மெழுகி யாங்கே
விதிபெறு கௌவியத்தைவிசிறிநாற் றுவாரந்தன்னிற்
பதியகற் றோரணத்தைப் பரமநூற்படியிற் செய்தே. (௨.)

பழுதறு கூலத் தாலும் பலவிதப் பட்டி னாலும்
வழுவறு முத்தி னாலும் வளைத்துமேல் விமானமாக்கித்
தொழுதிவண் டிமிர்பூந் தாராற் சூதபல் லவங்க டற்று
யழகுறு தருப்பை மாலை யாவரித் திடமீ தார்த்தே. (௩.)

மையறு கவரி தூக்கி மடிப்படுதுகில்க ணட்டித்
துய்யதோர் பிறைக்கண்ணடி துவசநற் குடை நிறைத்துத்
தெய்வமெய்த் தூபமிட்டுத் தீபமாலைகளுமேற்றுஞ்
சைவமாமண்ட பத்திற்றமனியப் பீட மீதே. (௪)

திருமலி யுபதேசஞ்செய் தேசிகன்வாச நீரா
லொருமைகொண் மனத்தான் மூழ்கியொளிகொள்பட்டாடை
குருவளர் நீறுபூசிக் கொற்றக் கண் டிகையும் பூண்டு [சாத்திக்
முருகவிழ் தொடையல்சூடி முடித்துநற் றரியச் சந்தி (௫)

எறிசுடர் மணிகளிட்டே யிழைத்தநூ புரங்கள் சாத்திப்
பிரிவுறு வினைக் கீடாகப் பிறந்திறந் தின்ப முற்றி
யறிவுறு தழல்வீ ரீதென் றரற்றுபூங் கழல்கள் கட்டி
யுறுகடிப் பிணையல் சாத்தி யுதரபந் தனமேல் வீக்கி. (சு)

மறிகடற் பிறந்த முத்து மாலைநல் வயிரக் கோவை
குறிகொண்மா மணிகள்சேர்த்துங் குருச்சுடரா ரம் பூண்டு
நெறியுறு கடகமாழி யங்கதஞ் சேர்த்துத் தெய்வப்
பொறிவளர் மகுடஞ்சூட்டிப் பொதியமால்வரைச்சந்தாட்டி (எ)

தென்றிசை நோக்குமெங்க டெய்வநாயகனுர்மூர்த்த
மொன்றிட மனத்துளாக்கியொளி கொணற்சுத்தவித்தை
யென்றசீர் மண்ட பத்திலீசர்வா ழிதமெட் டுள்ள
மண்டலங்கமல நாப்பண் வருசதா சிவப்பொ குட்டின். (அ)

ஒன்றிவீற் றிருந்த பின்னருறும்பெரும் புலன்களெல்லாம்
வென்றமா ணுக்கர்தம்மின் மெய்ம்மைகொண் ஞானதீக்கை
குன்றிடா துடையான்முன்னே குளிர்ந்தட்டநதிநீ ராட்டி
மன்றுசெய் கடன்களெல்லா மழகுற வமைத்து வந்தே. (கூ)

திருமலியைந்து சுத்தி செய்தருக் கியந்தா பித்தே
யொருமருப் பினன்றன் பூசை யுஞற்றிநற் றிரவியத்திற்
பரிவுறு நீர்தெளித்துப் பதார்த்தத்தை ஞானநோக்காற்
குருவுருவத்தைத்தன்னுட் கோகனகத்தில் வைத்தே. (௰)

இருள்கெடப்புறம்பே பூசைக்கியற்றுமாபோலியற்றிக்
குருவருள் பெற்றுப்பூசை குயிற்றிடவிருந்துமுன்பே
யிருபதமலருங் கைபா லேந்திமஞ் சனஞ்செய்வேதி
மருவளர் கமலப்பூவின் வைத்தருச்சனைமுன் செய்தே. (௰க)

கந்தநற் றயிலத்தாலுங் கவ்வியத்தாலு மாட்டிச்
சந்தமார் மதுக்கள்கூட்டித் தாபித்தவமிழ் தந்தெங்கின்
வந்தநீர் பலசாரங்கண் மலையநற் சாந்தநீரு
மெந்தைதாளிணையிலாட்டி யிடையிடைகுளிர்ந்தநீரும். (௰உ)

அருக்கிய நீருமாட்டி யழகுடனுலர்ந்தசுத்த
விருப்புறு திருவொற்றுடை விரைவுடன் சாத்திமற்றோர்
திருப்பொலிபீடமீதே செழுமடிவிரித்து நாப்பண்
மருக்கமழ் சாந்தம்பூசி வரைந்ததிற் பிரணவத்தை. (௰௩)

நமவெனு மெழுத்துள்ளாக்கி நறைகமழ் மலர்குவித்தே
யுமையரனுருவமாக்கி யோங்கிய தாளிரண்டு
மமைவுறவிருத்தியாங்கே யழகுசெய் கலவைச்சாந்த
மிமையவர் மகிழ்பூந்தாரோ டிலங்குபட் டாடைசாத்தி. (௰௪)

நறைகமழ் தூபதீப நல்லவான் பாலளாவி
குறைபறு சருத்தாம்பூலங் கொடுத்துமற் றுபசாரங்கண்
முறைவழுவாதே செய்து முன்பணிந்தெழுந்து நின்று (௰௫)
சிறையுடற்பொறையைத் தீர்க்குந்தேசிகபோற்றிபோற்றி.

ஒருமலமுடையார் தம்மையுயிர்க்குயிராகியாண்டு
மிருமலமுடையார் தம்மை யிச்சையாலளித்துந்திய
திரிமலமுடையோர்க்காசத் தீவகமாகிவந்து
கருவழி சுழலாவண்ணங் காத்தருள் குரவபோற்றி. (௰௬)

ஆலின் கீழிருந்து முன்னு ளருந்தவர் நால்வர்க்காக
நூலுரை செய்தாய்போற்றி நொய்யனேன் றனக்காயிந்தச்
சீலமார் மண்டபத்திற் சேர்ந்து வீற்றிருந்துபண்டை (௰௭)
மூலநோய்களைந்தாய்போற்றி முனிவனேபோற்றிபோற்றி.

வன்பெரும் பூதவாக்கை மண்டலநுனியதாய
துன்பமின்ன காமுள்ளே சொலித்திடும் பரதேகந்தா
னன்பர்கள் போற்றுந்தெய்வ வாலயமதனில் வாழு (௰௮)
மென்பெரு முயிரேயாக்கை யெனவுறைந்தருள்வாய்போற்றி.

துன்பமா ராண வத்திற் றுதைந்தெழு திமிரத் தாலே
யின்பமார் விழியிழந்தவெனக்கு மெய்ஞ்ஞானமென்னு
மன்புறு சலாகை நல்ல வஞ்சனத்தாலே தூய (௰௯)
வென்பெரு விழிகண் ணுளும் விளங்கிட வருள்வாய் போற்றி.

உரியவாதார சத்தியூர் முதனுதமீருய்
விரிவுறு புவனமெல்லா மேவியே போகந்துய்ப்பித்
தரியசீர் மாயைகன்ம மாணவ மகற்றியென்னைத்
தெரிவுறவெனக்குத் தந்ததீர்த்தனே போற்றிபோற்றி. (உ௰)

இருவினையாவியீச னில்லையென் றியம்பித்தீய
வருவினை புரியுலோக வாயதனுதியோர் செய்
திருவிலா நெறியிற்புக்குச் சேர்ந்துகீழ் நடுவே மீண்டுங்
கருவழி சுழலாவாறு காத்தருள்கடவுள் போற்றி. (உக)

நின்னது சத்தியாலே நீடுலகனைத்துந்தந்து
பன்னுவித் தழித்துமீட்டும் வந்திடவருள்வாய்போற்றி
யென்னுயிர்த் தலைவாபோற்றி யிருண்மலமடங்கநாயேன்
சென்னியிற் பாதஞ்சூட்டுந் தேசிகபோற்றிபோற்றி. (உஉ)

கலைதொறுந் தத்துவங்கள் கவினுறுபுரங்கண்மிக்க
மலைவறு மக்கரங்கள் வருபதமந்திரங்க
ணிலைபெற விருத்தியெல்லா நினைந்தற நீக்கிக்கன்மத் (உங)
தொலைவினின் மூலகோயின் றொழிலையுந்தடுப்பாய்போற்றி.

என்றே துதித்துப்பணிந்தவன்ற னிணைத்தாண் மலரைச்
[சென்னியினுங்
குன்ருவருள் சேர்விழிகளினுங் கோடாமுகத்து மிதையத்துந்
தன்ருழ் கரங்களாலணைத்துத் தபங்கும் பீடத்தினிலமைத்து
நின்றே யவன்றனருணோக்கி நெறியாற்ருெழுது விடை
[பெற்றே (உச)

குருபூசை முற்றும்.

ஆகத்திரு விருத்தம். ௬௭.

—∘∘∘—

## ஞானதீக்கை.

உண்டே னெருநற் பகலொருகா லுறுபேர் நிசியிலவனைந்துங்
கொண்டே துயின்று புலர்வதன்முன்குறித்தேயெழுந்துபுனன்
[மூழ்கி
யண்டா திபன்ற னருளாலே யழகா ரற்றைக்கட னனைத்துந்
தண்டாதியற்றியுணலொழிந்து தருவான் றுளிப்ராசாதம்போல்.

எழிலார் குறவனருணோக்க மெஞ்ஞான் றருளுமென்றென்று
தொழுவானிருந்த தாபசரைச் சூழ்வானகலான் முன்னின்று
விழுவானெழுவான் மொழிகுழறி விழிநீர்பொழியக்கம்பித்தே
யழுவானிடைவந்தானைந்து மழகார்மனுவோடளித்தலுமே. (௨)

அருந்தி முக்காலிடையிடையே யாசமனஞ் செய்தருள்வழியே
பொருந்தியுள்ளேபோதகன்முன்போதமறவேவிழுந்தெழுந்தங்
கிருந்த குரவன்றனைநோக்கி யிருகூர்விழிநீர் மழையெனவே
சொரிந்த புதல்வன்றனைத் தெய்வத்துயரு நோக்காற்சுத்தி
[செய்தே. (௩)

தெளித்தே நீரையத்திரத்தாற் சிவமாங்கரமு முடிமீதி
லளித்தேயவன் றனிதையமுதலைந்தா தாரத்தவ்வுருவங்
களித்தே நினைந்து தன்றலைமேற் கவிஞர்குருமண்டலநடுவே
துளித்தேனரும்பு மாயிரஞ்செந்தோட்டுக் கமலமலர்மீதே.(௪)

திருவருளுருவாயாசான் செம்மலரனைய செவ்வி
யிருவிழி யிருந்திண்டோள்களெழிறிகழ் செம்பட்டாடை
பருகு தேன்பிலிற் றுதேதார் பலமலர் செஞ்சாந்தோடே
மருவிமாமணி யிழைக்கும் மகுடமீதுற நினைந்தே. (௫)

அன்னாயகன்*சேவடிபோற்றி யணைந்தேயவன் றனனுக்கிரக
முன்னாளமைந்த குண்டவுரு மூலாதாரத் தனலெழுப்பித்
தென்னார்புருவத்திடையடையுத்தேயாமதியின்சுதைநெய்யாற்
றன்னார்மனமும்புத்தியுமேசாருஞ்சுருக்குஞ்சுருவமுமாய். (௬)

சீரார் கலைகள் சமிதையெனச்செறியு நாதத் தருப்பையினு
லோரா கிருதசுத்தியினை யியற்றி முன்னே யிருத்தலினு
லோரா வழலின்முகமதனை யுனுற்றுதொழிந்தே யோமத்தைத்
தாரார்சத்தி மயமாகுஞ்சாத மனுவா யியற்றிடபின். (எ)

திருவருள் பெறுமா னுக்கன்றேகத்திற்பூந்த தானத்
தருவமா மந்திரங் களணிபெறு பதம்வன் னங்கள்
வருபுரந்தத்துவங்கண் மருவியகலையொவ்வொன்றின்
நிறுத்தி சேனுய் நீங்குமாறேமஞ் செய்தே. (அ)

சிவமனு வதனுலுள்ளந் திருத்தியா மளவுமோம
மவமறவியற்றி மற்றவங்க மந்தி ரங்கட் கெல்லாம்
பவமறப் பத்துக்கொன்று பரிவுறவளித்துப் பின்னைப்
புவனுய கன்மூ லத்தாற் பூரணுகுதி புரிந்தே. (கூ)

அழலிடைமூலாதாரத்தானருட்சத்திமேவு
மெழிறிகழி யோகத் தன்னுறிடத்தினிற் புதல்வனுவி
வழுவறவாங்கி யோனிமன்னு வித்திட வமைத்த
லழகமர்ந்து சங்கமமாமென வறையு நூலே. (௰)

பிரிவுறுமலத்தி னின்றே பிரிந்துருத்திரனுற் காவி
யரியசீர்ப் புதல்வனுதலழகிய கருப்பாதானந்
திருவளர் சுதந்தராதி செறிதரு குணங்களெல்லா
மருவுதருனே புஞ்சவனமென மதிப்பர் மேலோர். (கக)

அருவமா மாயையாவி யறிவுறு விவேகந்தானே
திருவளர்தவத்தின் மிக்கோய் சீமந்தொன்னயனமெல்லாந்
தருசிவ முதலதான சதாசதப் பொருளையாங்கே
மருவியுட் கோடருனே மதித்திடிற் செனனமாமே. (கஉ)

திரிமலமகன்று தன்னுட் சிவத்துவந் தோன்றருனே
பெரியதோர் நாமமென்றே பேசுவரறிவின் மிக்கோர்
தெரிவுறு சிவத்துவத்தைச் சேருத றன்னைத்தானே
மருவுறு முபநிட்கிரமணமென மதிப்பர் மன்னே. (கங)

பொருவறு பரமானந்தம் புசித்திடலதனைத் தன்னுட்
பிரிவுறா துறையுமன்னப் பிராசனமென்பர் மேலோர்
துரிசறுசிவமே மேலாய்த் தோன்றுதலெவர்க்கும் யாதொன்
றறியதோர் சௌளமாமென்றறைவர் தத்துவ முணர்ந்தோர்.

அலகிலாப்பாச சாலமகற்று மெஞ்ஞான நூலோ
டுலவுதலொன்றி நாளு முபநயனந்தா னென்பர்
நிலவிடா திந்தியத்தி னீடறிவினை மறைத்தல்
பலர்புகழ் விரதர் தேசப்பான்மையாம் பகருங்காலே (கரு)

எங்கணுநிறைந்தான் றன்னோடிரண்டற விசைந்துநாளுந்
தங்கியவினைக்கீடாகச் சார்ந்திடுந் தநுவோடொன்றி
மங்கிடுமறுபிறப்பை மறுவற விடுதற்றானே
யங்கணன் கோதானந்தானு மெனவறைந்தானன்றே. (கசு)

உலகுறு பொருள்களோடே யுற்றபேராசை நீத்த
விலகுநீராடலென்றே மறைவல் னூலியம்பாநிற்கு
மலகில் சிற்சத்தி யோடே யனுபவித்திடுதலென்று
நிலைபெறு விவாகமென்றே நிமலநூலனைத்துங் கூறும். (கஎ)

உலவிடமனந்த சத்தியோட முந்திடாது நிற்றல்
பலர்புகழ் வனத்திற்சேறல் பழுதறத்தமியனுகி
விலகிடுசீவற் பாவமெறிதத்துவ மாமீரெட்டும்
புலமுற நினைந்தபின்னர்ப் பூரணுகுதியுஞ் செய்தே. (கஅ)

அரியதோரிராகுநீங்க வழகுறுமதிபோலாங்கே
மருவியபுதல்வனுவி மகிழ்வுற வெடுத்துமெல்லப்
பொருவறுபிரம ரூடிபுழை வழியேதுமீதே
குருவருண் மண்டலத்திற்கோக நகத்தில்வைத்தே. (கக)

திருவருள் ஞானனந்தச் செழுஞ்சுடரோ டொன்றுக்கி
மருவுறயோசித்தாங்கே மாசறுசிவன் போனேக்கி
யிருண்மலமகற்றுஞான விருந்தவர் தமக்குண்மேலாம்
குருபரன்மறித்து மோமந்தயிற்றி யாறத்துவாவும். (உ0)

மனமுறநிலைந்து நீக்கமறிந்து மந்திரம்பதங்க
ளினமுறு மக்கரங்களொழிறிகழ் புரங்கண்மிக்க
முனமுறு தத்துவங்கண் மொழிதருகலைகளெல்லா
முனியகத்தோமம்பண்ணியொடுங்குமாறினை நினைந்தே.(உக)

காரணாதிபரின் மேலாங்கழிபெருஞ் சிவபாவத்தாற்
பூரணாகுதியும் பண்ணிப் பொருவருவிழிகளாலே
பாரணாதீதமான பரானந்த ரூபமாகுந்
தாரணாசத்தியாகச் சார்ந்தவன் றனுவைப்பார்த்தே. (உஉ)

முழுதுணர்ந்தெவர்க்கும் போக முத்தியை வழங்குமெங்கோன்
செழுமலர்ப் பொநட்டு மீதே சேர்குருமண்டலத்துப்
பழுதற யோசித்தாங்கே பயில்பு தல்வன் றனைவி
வழுவறு மவன்காயத்தின் மன்னிட வமைத்துவைத்தே.(உங)

ஒடுங்குமா றடங்கியுள்ளே யோங்குமா றத்துவாவும்
படங்கொள் பாம்பசைத்தான் றன்னிற் பழுதறவமைத்துஞான
மடங்க லாலவனைப் பின்னும் வாச்சிய வாசகமிறந்தே
யடங்கிடாமன வாக்குக்கட்கோசரமாகியன்றே. (உச)

அறிவுறு பிரமா ணங்கட் கதீதமா யொப்பொன்றின்றிப்
பொறிகரணங்கட்கெல்லாம் புலப்படா விலக்கணங்கள்
செறிவுறு தாகியர் தந்திறந்து கேவலமாயுள்ளே
பிறிதரா வறிவானந்தப் பெற்றியா மெவைக்குமேலாய். (உரு)

துகளறு மவுன மாகித்து விதமத் துவிதமின்றி
யகளமாயகண்ட மாகு மறிவினைத் தியானம் பண்ணிச்
சகளமாம் புதல்வன் றன்னைத் தடக்கையாலணைத் தவன்றன்
றிகழ்தரு சென்னிமீதே சிவவடிவினை நினைந்தே. (உசா)

அவன்றனை யெதிர்நோக்கா வழகுற முன்னிறுத்திச்
சிவன்றன துருவமாயுஞ் சிவசத்தி வடிவமாயு
நவந்தரு கமலத்தோங்கு நாண்மலர்ப் பதங்கள் சூட்டப்
பவந்தவிர்முதல்வன்றானும்பங்கயச் செங்கைகொண்டே. (உஎ)

முடிமுதற் றனமெல்லா முறைமுறை யமைத்துமுன்னின்
றடியனே னாவியாக்கை யரும்பொருளனைத்தும் யான்செய்
கொடுவினை யகலுமாறு கொண்டருளெனப் பணிந்து
கடிகமழ் புனலினோடு காஞ்ச னமணிகலந்தே. (உஅ)

மனமொழி மெய்களாலு மகிழ்வுறக் கொடுக்கவாசா
னினமலி பொருளனைத்து மெனதென வாங்கலாலே
தனதுறு வசமொன் றின்றிச் சார்ந்துமெய்ப் புளகம்போர்ப்ப
முனமதுபரமானந்த முகிழ்த்திட வணங்கி நின்றே (உகூ)

ஆடுவன் கரங்கள்கொட்டி யழுதுறு மெய்வியர்ப்பப்
பாடுவனுதகீதம் பலபல விதங்களாக
வோடுவன் சிரிப்பன் பாசவுணர்வினை யிழந்து தன்னைத்
தேடுவன் றிகைப்பனுசான் றிருவருணோக்கஞ் செய்தே. (ஙO)

மாறில்சீர்ப் புதல்வன்றன்னை வரவழைத் திருத்திக்கோமா
னாறுமீரேழு முன்னின் றரிக்கு மேமேழழி லாக்கி
வீறுசேர் சிவனவன்றன் விமலையோடொன்று மூலங்
கூறுசெய் தருக்கனுகக் குறையற வுபதேசித்தே. (ஙக)

திருமலிபுதல்வனுக்குத் தீதறத் தான்முன் சூடு
மருள்வளர் தொடையல்சூட்டி மௌலியிற்புழற்காற் செய்ய
விருசரோரு கங்களென்ன வெறிசுடர்க் கடகமாழி
மருவிய கரங்களாலே மகிழ்வுற வபிடேகித்தே. (ஙஉ)

ஓங்குமுப் பொருளினுண்மை யுரைத்து முன்னதனைநன்று
யாங்கவன் றெளியு மாற்று லையிரு பகுதியாகத்
தேங்கம ழிதழித் தாரான் செப்பு காரியத்தைத்தானும்
பாங்கினு லருளிச்செய்யப் பழுதற லவனுங்கேட்டே. (ஙங)

திருவளர் பாதபூசைசெய்து முன்பணிந் தெழுந்தே
யருவமா யுருவமாகி யருவுரு வாகியன்றாய்
நிருமல வடிவிருக்க நீசனேன் றன்னையாளக்
குருவருள் வடிவங்கொண்ட குழகனே போற்றிபோற்றி (ஙச)

ஐயனேபோற்றி யாண்டவமலனே போற்றிஞான
மெய்யனே போற்றி தீய வினைவழி யுழலாவண்ணம்
பொய்யனேன் றன்னையாளும் புண்ணியப் பொருளேபோற்றி
சைவனேபோற்றி யெங்கடலைவனே போற்றிபோற்றி. (ருரு)

சம்புவே போற்றியார்க்குந் தாணுவே போற்றிமேலை
யும்பராலறிய வொண்ணு வொருவனீ குரவனாகி
யிம்பரில்வந்து தீயேனி ருண்மல வலிதொலைக்கு
நம்பனே போற்றி யெங்கணாயகா போற்றிபோற்றி. (ருசு)

தந்தையாயென்னை முன்னின்றதாயு மாயளித்தாய் வாழி
சிந்தையே வாழிநாயேன் றிளைத்திடும் பொருளேவாழி
யந்தமோடாதியில்லா வமலனே வாழிமுன்னைப்
பந்தமா மலநோய் தீர்க்கும் பரமனே வாழியென்றே. (ருஎ)

துதித்துநீடண்டு போலத் துயர்கெட நாஞென்றின்றி
விதிப்படிப் பணிந்துமுத்த மெய்த்தவர் தம்மையெல்லா
மதிப்புடன் வணங்கியன்னார் மகிழ்வுறக் காசுந்தூசு
ந்திக்குவைதானுந்தானு நேசமோ டளித்தபின்னை. (ருஅ)

அணிசெய்தோர் மண்டபத்தை யழகுசேர் கம்பலத்தான்
மணியணிமாலை யானும் வண்டொடு சுரும்பரற்றப்
பிணிமுறுக்கவிழ்ந்துசெந்தேன்பிலிற்று பூந்தொடையலானு
நனுகியே குரவன்றன்னை நவையறு தவத்தோரோடும். (ருகூ)

இங்கெழுந்தருள வேண்டுமென்று முன்பணிந் தெழுந்தே
யங்கவர்பாத மெல்லாமழகுறு புனல்களாட்டிப்
பங்கமிலாசனத்திற் பரிவுற விருத்தி நல்ல
கொங்கவிழ்மலர்கள்செங்கைகொண்டருச்சனைபுரிந்தே. (சுய)

பரிகலந்திருத்தி யான்பாற் பதமுத லளித்தன்னூா
யுரிமையாலமுது செய்வித்துறும் பெருஞ்சடமாந்திய
விருண்மல வலிகெடா விம்மையே சீவன்முத்தி
மருவினன் ஞானதீக்கை வாழ்வீது வெனவளித்தான். (சுக)

ஞானதீக்கை முற்றும்.
ஆகத் திருவிருத்தம். ராஅ

## தத்துவரூபம்.

என்றினியதேசிகனியம்பவதுகேளா
நின்றபுதல்வன்றொழுதுநீடருளினாலே
யன்றுதசகாரியமளித்தமுறைநாயேற்
கின்றருள்செய்யென்றிடலுமேந்தலருள்செய்வான். (க)

தத்துவரூபங்காட்சிதற்சுத்தியான்மரூபஞ்
சித்துயிர்க்காட்சிசுத்திசிவரூபஞ்தரிசனத்தோ
டொத்துறையோகபோகமொன்பதோடொன்றுமன்றே
பத்தெனுங்காரியத்தினுத்தேசம்பகருங்காலே. (உ)

### வேறு.

ஆகிலிப்படியையிருகாரியம்
வாகைசூடியதாபதமன்னவா
யோகையோடெற்குணர்த்துதியென்றலு
மேகன்ஞானவியல்பையியம்புவான். (ங)

சிவசமவேதையாகிச்சித்தாகியமலையாகு
முவமையில்சத்தியொன்றின்ஞானமாமுரைக்கின் முன்னாட்
பவமுறுகாலந்தன்னிற்பருவஞ்சேருயிர்கட்கீச
னவமறவுரைத்தநாலேழாகமத்தமர்வதாகும். (ச)

சுத்தமாம்விந்துமாயைபிடத்தெழுந்தூலசூக்க
தத்துவமனைத்துநான்காந்தனுகரணதியாக
வுத்தமதுணத்தோயுன்றேடொன்றியேநின்றவென்றும்
புத்திசெய்மூன்றதாகப்புகன்றிடினுருவமீதாம். (ரு)

மேதினியாதியாகமேயதத்துவங்களெல்லாஞ்
சோதியர்ப்புவனநாதர்சூழ்ந்தினிதிருக்கவெங்கு
மாதிநாயகனுர்யாவுமகத்தினுஞ்சித்தாய்க்காண்ட
றீதிலாத்தத்துவத்தின்றரிசனஞ்செப்புங்காலே. (சா)

பூதமுன்சிவமீறாகப்பொருந்துதத்துவங்கடம்மை
யாமுறையொன்றையொன்றிலடக்கியேவைத்தெலாமு

நாமலவென்றெண்ணிநகுதல்செய்திடுதலன்றே
யாமென்பர்தத்வசுத்தியாகமமுணர்ந்தமேலோர் (௭)

அறிவதாய்வன்னமின்றியருவமாயகிலமெங்குஞ்
செறிவதாயெனதென்றேதுஞ்சிறப்புடைத்தாகிமேலாய்ப்
பிறிவதாய்ப்பின்னுபின்னப்பிணித்தழும்மலத்தினாலு
முறுவதாமான்மரூபமுத்தமகுணத்தின்மிக்கோய். (௮)

அணுவினையடைந்தேயன்றுமகன்றிடாஞானச்செய்தி
நுணியபேருருவந்தன்னைநோக்காதுநோக்கிப்பொல்லாத்
திணியபேருருவிற்றோன்றுஞ்சிற்றறிவல்லயானென் (௯)
றணுவதேயணுவின்காட்சியென்றனனெவர்க்குமேலோன்.

அந்தவாகாயந்தன்னையடைந்திடுவதனுக்கேற்ற
சிந்தனையெல்லாமீசன்செயலெனத்தெளிந்துசேர்ந்த
பந்தம்யானல்லனெல்லாம்பரவசமென்றுபார்க்குஞ்
சுந்தரவறிவேயான்மசுத்தியாஞ்சொல்லுங்காலே. (௰)

அருவுருவிரண்டுமின்றியதீதமாய்த்துரியத்தப்பாற்
பரசிவமாகியெல்லாத்தத்துவப்பான்மையீந்து
பெரியதோர்தாணுவாகிப்பேசுதத்துவங்கடந்த
திருவருளுருவனாளுஞ்சிவரூபமாகுமென்பர். (௰௧)

அண்டத்துக்கண்டமாகியணுவினுக்கணுவுமாகிக்
கொண்டுதானணுக்களுள்ளங்குகையெனத்தோற்றநாசம்
விண்டுபேருபாதிநீங்கிவிமலமாமுயிருட்டோன்றுந்
தெண்டிரையமுதமென்னச்சிவதரிசனமீதாமே. (௰௨)

தன்னுயிர்சிவத்தோடொன்றத்தகவிலாமலங்கணீக்கி
யன்னதுநானேயாமென்றன்னியமிலாமைநோக்கிப்
பின்னமாமவனிலியானிப்பிறப்பிறப்புறுதலாலே
யென்னுமாதரவைவீட்டல்சிவயோகமென்பர்மேலோர். (௰௩)

உண்மையாஞ்ஞானாநந்தவொளியினுளடங்கித்தூய
திண்மையாங்குணங்களெட்டுஞ்சேர்ந்தனுபவித்துநீங்கா

வண்மைபாலதிசயங்கண்மாய்ந்தா தானாகிநின்ற
நுண்மையேசிவபோகந்தானுமென்று நுவலுநூலே. (௰௪)

இதுதசகாரியத்தினிலக்கணம்பரிக்கைமுற்று
மதிசெய்தாருரைக்கவல்லாராயினும்வடநூல்வல்ல
வதிதவாலறிஞர்கூறவையமுந்திரிவுமின்றி
விதிமுறையுணர்ந்தவாறுவிளம்புவங்கேட்டிமேலோய். (௰௫)

யாதுபாதானத்தென்றுமிறைவன்றனிலையமாதி
பேதமூன்றுண்டாயாரும்பேசுதற்குரியனானன்
யாதுமாமாயைமாயைகுண்டலியமலைவிந்துத்
தீதில்வாகீசிவித்தைசிவமிவைபரியாயப்பேர் (௰௬)

ஆகியாங்காலந்தன்னிலனந்தகாரியமுள்ளாக்கித்
தீதிலாக்குடிலைநாப்பண்சிறந்ததோர்ஞானந்தோன்றுஞ்
சோதியாய்ரூபமாகியுலகெலாஞ்சூழ்ந்துமேலாய்ப்
பேதிபாவதற்குநாமம்நாதமாம்பேசுங்காலே. (௧௭)

சாதகற்கிலக்குமாகித்தயங்குநற்படிகமென்னச்
சோதியாயுவமமின்றாய்த்தோற்றுதத்துவங்கட்கெல்லா
மாதியாய்ரூபமின்றியனுமயமாகியொன்றாய்க்
கோதிலோங்காரமாகியுயிர்தொறுங்கூடிநின்றே. (௧௮)

குறைவறவறிவையார்க்குங்கொடுத்தரற்குருவமாகிச்
செறியுமூவுலகமெல்லாஞ்சிவமெனத்தெருண்டுபோற்றப்
பிறிவுறுவாக்குநான்காய்ப்பிறப்பதற்கிடமாய்வீயா
நெறியுண்டத்தாருமீது சிவமெனநிசழ்த்துநூலே. (௧௯)

கிரியையாம்விந்துமுன்சொற்கேடிறத்துவத்திற்றோன்றி
யரியசீரமலன்சத்திக்கமர்விடமாகியெல்லாம்
பரிவுறவளிக்கவந்தபான்மையாற்பதமுமாகி
யுரியவைங்கலையுமாநுஞ்சத்திதத்துவமென்றோரே. (௨௰)

ஞானமுங்கிரியைதானுநணுகியொத்தவர்க்குப்போக
மானதோரூபாரூபமாகியந்தரமாய்த்தோன்று

மீனமில்சத்தியின்பாலிமுது விற்கிடம்போல
வானநாயகனுர்மன்னுஞ்சதாசிவமதிக்குங்காலே. (௨௧)

ஏறியேகிரியைஞானமிழிந்தநீச்சுரந்தான்முன்னே
கூறியசதாசிவத்திற்குறைவறவுதிக்கும்வித்தை
மாறிலீச்சுரத்திற்ருேன்றும்பங்கியேகிரியைஞானம்
வீறிடவமலன்ருனேவிளைத்திடுமிவைகளெல்லாம். (௨௨)

சுத்தமாம்விந்துவின்கட்டோன்றுதத்துவங்களைந்து
நித்தமென்றுரைப்பர்சூக்கநீங்கிடாநீர்மையாலே
யத்தகுதூலந்தானுமடங்கிடாதாகித்தோற்ற
மித்தையாமாயாவாதவெறியருக்காகுமீதே. (௨௩)

நித்தமாயொன்ருயெங்குநிறைந்தருவாகிவீடாச்
சத்துமாய்வினைகளெல்லாஞ்சார்ந்திடுந்தானமாகிச்
சுத்தமின்ருகிக்கன்மத்துடக்குறுமுயிர்கட்கெல்லாம்
பெத்தமாய்நீங்காதோங்கும்மாயையின்பெற்றிதானே. (௨௪)

இருவிதமாகுமாயையேயதத்துவங்களெல்லா
மொருவகைசூக்கந்தூலமொருவகையாகுஞானக்
கிரியைகள்விளக்கிச்சூக்கந்தத்துவக்கிழமையாலே
மருவியான்மாவைநீங்காதமர்ந்திடுமதிக்குங்காலே. (௨௫)

உற்றிடும்புவனத்தோடுமுளதனுவாதியோடு
மற்றையதூலந்தானுமாய்ந்திடாதுறையுமீது
கற்றவரறிவர்யாருங்காண்பரேற்காலமாகித்
தெற்றெனவுருவமாகிப்புவனமாய்ச்செறியாமுன்னர். (௨௬)

படிமுதலானவெல்லாம்பயிலுமேலிவற்றைநாளு
முடிவுசெய்தாக்கிக்காத்துமுதல்வருண்டென்பதென்னை [லாம்
நொடியிலார்முயற்கோடொக்குந்நோன்மையினென்னினெல்
வடிவுறுஞ்சத்தியாகிவருவதுவியத்தியாமே. (௨௭)

ஆதலான்மாயைதன்னைக்கலக்கிடவநந்தருள்ளக்
கோதிறத்துவங்களுண்டாம்விகிர்தியின்கூட்டந்தன்னை

யோதுவாமாயையாகத்தத்துவத்தோடொன்றாக்கித்
தீதிலாமாயாரூபமீதெனச்செப்புநூலே. (உஅ)

மாயையிற்காலந்தோன்றுந்துடிமுதன்மருவிநுட்ப
மாயதோர்காலமூன்றாயுலகெலாமாக்கிப்போக்கி
யேயவேமலபாகந்தானியற்றிடுமெனந்தமீதேவ
நாயனாரருளினாலேயுயிரெலாமுத்திநண்ணே. (உக)

பின்னதினியதிதோன்றிப்பெருகியநியமரூபந்
தன்னியல்பாகியெல்லாவினைகளுஞ்சாரச்செங்கோன்
மன்னவனாணையென்னவரன்முறைநடாத்துமென்று
மன்னதாலனுக்களியாவுமருந்திடும்போகமார்ந்தே. (ஙo)

அந்தமோகினியிற்றோன்றியருங்கலைசிறிதவித்தை
சிந்தியேஞானம்வைத்துத்தெரிவிக்குங்கிரியாசத்தி
நந்திடாதோரிடத்தேநனுகிடும்வினைக்கீடாக
முந்தியபந்தமென்றுமொழிந்திடும்புருடர்க்கெல்லாம். (ஙக)

வித்தையக்கலையிற்றோன்றியறிவினைவிளக்கவுன்னும்
புத்தியிற்போகமெல்லாம்பொருந்தியேயுயிர்களென்று
முத்தமகரணமாகவுரைக்கலாமதனாற்புத்திக்
கொத்துறுசத்தமாதிவிடயமுங்கொள்ளுந்தானே. (ஙஉ)

வித்தையோடிராகந்தோன்றிமேவியேயிச்சாரூபம்
புத்தியின்விசிட்டத்தாலும்புற்கலர்க்குபகரிக்குந்
தத்துவமைந்தினுள்ளேசார்ந்திடுஞ்சகலர்க்கஞ்ஞான்
றொத்துறும்புருடனாயதத்துவமுதிக்குமன்றே. (ஙங)

ஆயதத்துவத்தினாலேயடைந்துபோத்திருத்துவத்தை
மாயையான்மயங்கிப்புத்திமருவியபோகமெல்லாம்
நாயகனருளினாலேநயந்திடுமுயிர்களென்று
மேயதத்துவங்களேழுமீச்சுரமென்பர்மேலோர் (ஙச)

கூறியகலையின்மாறுங்குணம்விளங்காமைதோன்று
மேறுதல்குறைதலின்றியிதனின்முக்குணங்களாகு

மாறில்சீகண்டராலேசத்துவமலங்கணீக்கி
யீறிலாச்சுகமாய்முத்தியெய்துதற்கேதுவாமே. (௩௫)

தூய்யசீரிராசதந்தான்றுக்கமாய்ச்சுவர்க்கத்துய்க்கு
நையுறுமோகமாகித்தாமதநரகத்தாழ்க்கு
மெய்திமுக்குணங்களெல்லாமுயிர்தொறும்புந்தியாதி
மெய்யுறுதத்துவத்திற்பின்னமாய்விசேடித்தோங்கும். (௩௬)

புந்திமுக்குணத்திற்றோன்றிப்பொருந்தியவினைக்கீடாக
வந்திமேலோடுகீழுமுறும்பெரும்போகமெல்லாந்
தந்துநிச்சயித்துநிற்குந்தருமமுன்னையவெட்டும்
வந்திடும்விருத்தியாகுமதியினுக்கெண்ணுங்காலே. (௩௭)

தருமமுன்னையநான்குஞ்சத்துவமிராசதந்தா
னுரியசீரிராசமாகுமொழிந்தவைமூன்றுமுன்னே
மருவியதாமதத்தின்குணமெனமதிப்பர்புந்தி
குருவளர்சத்துவத்தின்குணமிகவிரண்டுங்குன்றும். (௩௮)

யானெனுமகந்தையென்றுமிருக்குமாங்காரந்தானு
மூனமில்புந்தியுள்ளேயுதித்திடுமதுவுமூன்று
மானதைசதவைகாரியணிகொள்பூதாதியென்றே
நானலாதெனையொப்பார்களுட்டினிலொருவருண்டோ. (௩௯)

என்றபேரகந்தைக்குள்ளேயைதசதத்திற்றோன்றி
நின்றிடுமனங்களைக்கிநிகழ்பெரும்விடயமெல்லாஞ்
சென்றணைவிக்கும்புந்திநிச்சயஞ்செய்யநானு
மொன்றியகாக்கைக்கண்போலுள்ளினும்புறத்துஞ்சென்றே.

தோற்றும்பின்றைசதத்திற்சோத்திரமாதியைந்துஞ்
சாற்றுவானுதியைந்திற்சத்தமுஞ்செவியிற்சாருங்
காற்றுமுன்னையநான்கிற்கலந்திடும்பரிசந்தொக்கி
லேற்றமாம்விழிநாநாசிவிடயமுமிவைபோலெண்ணே. (௪௧)

வண்மைவைகாரியத்தின்வந்தகன்மேந்திரியங்கள்
பண்ணமர்வாக்குப்பாதபாணிபாயுருவுபத்தந்

திண்மைகொடொழில்களைந்துஞ்செப்புவாம்வசந்தானம்
வண்மைகொள்கமனத்தோடுவிசர்க்கமானந்தமென்றே. (௪௨)

ஓதுபூதாதிகத்தினுதிக்குமாத்திரைகளைந்துந்
தீதிலாச்சத்தமாதிசேர்ந்திடு கந்தந் தன்னிற்
கோதிலாவிரதமந்தங்கூடுமற்றதனைநீங்கா
தீதுபொன்மூன்றினையுங்குணங்கவொன்றொன்றிழந்தே. ௪௩

பூதமாத்திரைகட்டமிற்பொருந்தியேயிருக்குமென்றுந்
திதிலாத்தானந்தானியாமிவைசெப்புங்காலை
யோகின்மாத்திரைகட்போலுறுமதிலிலேபம்போலக்
கோதிலாப்பூதமைந்துங்கூடியும்வேறுமன்றே. (௪௪)

வானமுஞ்சத்தமாகுமாத்திரையதனிற்றோன்றித்
தானஞ்செய்திடமேவைக்குஞ்சார்விடமாகிவேறற்
றூனமிற்விராதிசத்தமுமுதிப்பித்தோங்கு
மீனமில்வரவுபோக்குக்கிடமுமாமுயிர்கட்கெல்லாம் (௪௫)

பரிசமாத்திரையின் வாயுற்பவித்தெலாஞ் சலிக்கப்பண்ணி
விரிவுறுபொருளனைத்துந்திரட்டிமேலோச்சிச்சுற்றிப்
பரிவுறுபிராணனாதிபத்தெனப்பெயர் பரித்தே
யரியசிற்றுயிர்கட்கெல்லாமகம்புறமாகுமன்றே. (௪௬)

இலகனலுருவதன்மாத்திரையகத்துற்பவித்துப்
பலபொருளுயிர்கடொக்கப்பக்குவம்பண்ணியெல்லா
வுலகினுமொன்றாயோங்குந்தென்றிசையங்கியந்தம்
விலகியேசைவவிந்துவதரவெவ்வழலுமாமே. (௪௭)

தோற்றிடுமிரதந்தன்மாத்திரையினிற்றோயம் பின்னைச்
சாற்றுசங்கிரகாளுந்தொழில்சராசரங்கட்கெல்லாம்
போற்றியபோசமாக்கும்பொருந்திய தூளிதன்னை
மாற்றியேதிடமதாக்குமவனியைமன்னிநின்றே. (௪௮)

கந்தமாத்திரையிற்றோன்றிக்கடினமாய்த்தரிக்கும்பூமி
யந்தமாத்திரையிலுள்ளதுணைமைந்துமவனிக்காகும்

முந்தொன்றுகுன்றிநான்குமூன்றிரண்டொன்றுநீர்தீ
வந்தவானிடத்திற்றோன்றுங்குணங்களுமதிக்குங்காலே. (௪௧)

வளியுதியாதுவானின்வன்னியும்வளியிற்றோன்று
தளியுறுகமலந்தானுமனலிடையெழாதுபூவுங்
களியுறுசலித்தெழாதுகாண்டலாற்குணங்களேறி
வெளியுமைங்குணத்துவத்தைமேவுமப்படியேதோன்றில். ௫௰

சாற்றிடுந்தனுவேயாகுந்தாரணியாதிபத்து
மூற்றமாங்காரணமாகுமொன்றோடீராறுமுன்னி
லேற்றமுக்குணங்களாமொன்றேழுமுட்கருவியாகுந்
தோற்றியவாக்குநான்குஞ்சுத்தமைந்தேவுஞ்சூழ்ந்தே. (௫௧)

உற்றிடுந்தத்துவத்தினுருவமாந்தனுவுமூன்றாய்ப்
பற்றிடுந்தூலஞ்சூக்கம்பரமெனப்பரமஞான
நற்றவதூலம்பூதநணுகியவடிவமாகு
மற்றதட்டகமதாகும்வயிந்தவம்பரமாமன்றே. (௫௨)

தத்துவவுருவத்தோடேசார்ந்திடுமுயிர்கட்கெல்லாஞ்
சுத்தமாம்பரதேகத்திற்சொலித்திடும்வாக்குநான்கு
நித்தவிஞ்ஞானர்க்கன்றேநிகழ்ந்திடுந்தூலஞ்சூக்க
மொத்துறும்பரமுமாகியொளிதிகழ்வயிந்தவந்தான். (௫௩)

தத்துவரூபந்தன்னைச்சற்குருவருளினாலே
புத்திசெய்பெரியோர்ஞான பூரணனருளினாலே
வைத்திடும்பதத்தின்மேலாய் மருவியபோகந்துய்த்து
நித்தியமுத்தசுத்த சித்துருநேர்வரன்றே. (௫௪)

தத்துவரூபமுற்றும்

ஆகத் திருவிருத்தம் ௧௱௨.



# தத்துவ தரிசனம்.

நாலுகோணம்பிறைமுக்கோணமறுகோணம்
நணுகியசீர்வடிவுநிறம்பொன்னாதியாகும்
மேலுமதிபதிகண்மலரயனாதியைவ
ரியம்பியிடுஞ்சத்திகளும்வாணிமுதலோர்கள்
கோலமாங்கலைதானுநிவிர்த்திமுதலாகுங்
கூறுநிலநீர்வன்னிவளியண்டங்கட்குச்
சீலமுறுமிருதயமுங்கந்தரமுநாவுஞ்
சிறந்தபிருகுடிநடுவுஞ்சென்னியுமாமிடமே. (௧)

எலும்புதசைநரம்புதோல்மயிரைந்தாமவனி
யியம்பின்றலமலநீர்சுக்கிலமிரத்தமச்சை
குலங்கெடுக்கும்பசியாசையுறக்கமடிவாட்டங்
குலவுமனல்வாயுவிலங்கனஞ்சயனங்கூட
லலங்கறவேயோடிடுதல் விழுந்திடுதல்வான
மராகம்வெறுப்பிலச்சையைய்யமோரெனவைந்தாகு
மிலங்கியிடுமையைந்தும்பூதத்தின்பிரிவாயிருந்
துடலைப்புறம்பேயுமியற்றுமெனவறியே. (௨)

கந்தமுதன்மாத்திரைக்கும்பொன்னாதியுருவங்
கருதிலுபத்தாதிக்குமிவ்வண்ணங்கழறு
முந்தியமூக்காதிக்குமிவ்வுருவேமொழிவா
முன்னியிடுமனம்புத்தியாங்காரஞ்சித்த
முந்தியிடும்புருடனெனவுரைபெறுமைந்திற்கு
மொளிகொணிறம்வெண்மைசிவப்புக்கருமைவெண்மை
சந்தித்தகறுப்புவெண்மையகாரதிவடிவாஞ்
சாற்றுமலரயன்முதலோர்சாருமதிபதிகள். (௩)

நந்தலிலாப்பிரகிருதிசங்கநிறந்திமிர
நணுகியிடுமராகம்வித்தைபுகையாகுநாடிற்
குந்தநிறங்கலைநியதிபொன்னிறமாங்கூறிற்
கூடியிருஞ்சிருட்டிமுதன்மூன்றுருவாங்கால

மந்தியமாமாயைதானத்திமிராகார
மாடகமாஞ்சுத்தவித்தைதிமிரமீச்சுரமாஞ்
சுந்தரநற்படிகநிறஞ்சதாசிவமாம் விந்துந்
துவாதவளநாதமெனச்சொல்லிடுமாகமமே. (௪)

வேறு.

எண்ணியமுப்பத்தாறுமியைந்திடுங்கன்மத்தோடே
நண்ணியவனுக்கட்கெல்லாநாயகனருளினாலே
திண்ணியமனத்தாலுள்ளேதரிசனஞ்செய்புறத்துங்
கண்ணியபூமியாதிகாணுமாறுரைப்பக்கேணீ. (௫)

தத்துவவத்துவாவைச்சங்கிரகித்துக்கூற
வுத்தமகுணத்தோய்கேட்டியொராயிரகோடியண்ட
மித்தலத்துளவாநீர்க்குமிம்முறையனலாதிக்கும் [லாம்.
புத்திசெய்யொன்றையொன்றுபொருந்திடுமிவைபோலெல் கூ

ஒண்டிறற்கடாகங்கோடியோசனையனலமூர்த்தி
கொண்டபேர்நிலையங்கோடிகுருச்சுடரீரைங்கோடி
மண்டியபுகையைங்கோடிவலியுறுமநேககோடி
திண்டிறல்வீரர்சூழக்காலவங்கிசர்சேர்வர். (எ)

ஓங்கியநாகமீதேயுற்றிடுநூற்றுநாற்ப
தாங்கதற்கதிகமெண்ணான்கவற்றுளுமநிகமூன்று
மேங்குறும்வீசியோடேரௌரவங்கும்பிபாக
மூங்கினுங்கிழுநள்ளுமுறைந்திடுமுணருங்காலே. (அ)

இந்தமாநரகமூன்றுமெவ்வெட்டாமொன்றின்முப்பான்
றந்திடுநன்ஞன்காகத்தட்டெண்ணான்கினுக்குமான
மந்தரத்தோடுங்கோடியாயிடுமொவ்வொன்றப்பாற்
சுந்தரக்கூர்மாண்டந்தான்றெண்ணூற்றென்பானிலக்கம். (கூ)

அதன்மிசையுரகர்வாழுமசுரராக்கதர்களோடு
மிதமுறுபாதலந்தானேழென்பவிவற்றின்மீதே

பதமுறுமாடகர்க்தப்பார்த்திடினெவ்வொன்றென்பான்
[illegible]தசமக்கராளஞ்சாற்றிடினூற்றுப்பத்தாம். (௰)

இருபதுநூற்றுப்பத்துயோசனைபூமியாக
வொருபதிற்றைந்துகோடியுற்றிடுமுலகத்தின்கண்
ணரியதோர்மேருநாப்பணமர்ந்துவாராழிசூழ்ந்து
பரிவுறுதலந்தான்சங்குத்தீவெனப்படுவதாமே. (௰௧)

இலக்கமொன்றிரண்டுநான்காமிம்முறையேழுதீவுங்
கலக்குறுகடல்களேழுங்கனகமால்வரைகள்ளாதி
தலத்தினின்மேவுநன்னீர்சாகரத்தளவீர்கோடி
யிலக்கமைம்பத்துமூன்றோடேயுமாயிரமைம்பானும். (௰௨)

ஆடகவுலகம்பத்துக்கோடியாமதனுக்கப்பாற்
பாடுறுவலயமானபருப்பதவகலந்தன்னை
நாடுவரயுதமாகஞாயிறுமுதலாயுள்ளோர்
பீடுறுமொளியதற்குட்பிறந்திடும்பேசுங்காலை. (௧௩)

ஐயெழுகோடியேநூறாயிரப்பத்தொன்பானே
டெய்திடுமெண்ணைந்தாயமூவாயிரவிருளுலோக
மொய்கடல்கோடியேர்டேமூவென்பானிலக்கங்கோடி
மையறுகடாகமாகவாய்த்திடுமைம்பான்கோடி. (௧௪)

இருநிலநான்குதிக்குமிவ்வளவாகுமீதே
வருமெழுபுரவித்தேர்மேன்மருவியவிரவிலோகங்
கருதிலோரிலக்கமாகுங்கலைமதியுலகுமற்றே
திருமலியுடுக்களெல்லாஞ்சேருமண்டல மிலக்கம். (௧௫)

மதிமகன்புகரேசெவ்வாய்வானவர்குரவன்மந்தன்
பதிகளிவ்விரண்டிலக்கம்பழவினைக்குறும்பெறிந்த
வதிகவாலறிஞர்க்கானவாரிடவுலகிலக்கம்
வதியுமோரிலக்கத்தப்பான்மற்றையதுருவன்றானம். (௧௬)

திருவாருமகலோகம்பின்சனதவலோகங்கட்கே
யிருகோடியெண்பதோடைந்திலக்கமெண்கோடியீரா

றுருவாயசத்தியலோகமோங்குமேலதிகமாக
மருவாருங்கமலத்தோர்க்குவாய்த்தவெண்ணிரண்டுகோடி. கஎ

விண்டுவின்பதந்தான்கோடிமேவிடுமொன்பான்கோடி
யண்டநாயகனூர்வாழுமாலயங்கடாகங்கோடி
கண்டிடிலைம்பான்கோடிக்காசினிமுதலவாக
வுண்டொருநூறுகோடியோசனை பிரமாண்டந்தான். (கஅ)

கொடுந்திறற்கொடிற்றுக்கூர்வாய்க்கூக்கிடத்தண்டமென்ன
விடுஞ்சுடர்க்கனகமேனிமேதினியண்டஞ்சூழ
வடுந்திறலிந்திராதியையிருதிசையும்வாழ்வர்
கடுங்கொலைக்கபாலிசாதிநூற்றுவர்காவல்பூண்டே. (கக)

திசையினுக்கதிபராஞேர்திறலினையடக்கியன்னோர்
வசையறுபடைகடாங்கிமாதிரக்காவல்பூண்டு
தசையுறுகபாலமாலைதரித்தரன்சத்திதம்பா
லிசையுறப்பிரமாண்டத்தையெழிலொடுந்தரித்துவாழ்வர். (உ௰)

சாற்றியபிரமாண்டத்திற்றசகுணமாவரிக்குந்
தோற்றுபேராரவத்தோடுசுழிதிரைசூழ்ந்தநீர்த்தம்
போற்றியவமிர்தமேனிப்புண்ணியவருணமூர்த்தி
மாற்றருந்திறலினேடுமன்னுவரதன்மேன்மாதோ. (உக)

ஒளிகொணற்படிகமென்னவோங்கியவமரேசாதி
தெளிவுறுநாலிரண்டுஞ்செறிந்திடுமிந்திராதி
களியுறுதிசைகளெட்டுங்கவின்பெறுமதற்குநாம
மளிபெறுமாதிருய்யவட்டகமென்பர்மேலோர். (உஉ)

துதியுறுபுனற்குமேலாய்ச்சூழ்ந்தினிதிருக்கும்வன்னி
பதின்மடங்கதன்மேற்செய்யபாவகமூர்த்திவாழு
மதிருய்யவட்டகப்பேராமரிச்சந்திராதிக்
கதிதருபயிரவாந்தங்கவினேடெண்டிசையுஞ்சூழ. (உ௩)

தேயுவாவானத்தும்பர்தெசகுணமாகமேவும்
வாயுவாவர்ணநீலமணிநிறமதனில்வாழ்வர்

நாயகவாயுதேவர்நற்றவகையையேயாதி
யாயுநற்குய்யாற்றுய்யவட்டகஞ்சூழ்வரங்கே. (உச)

அதன்மிசைவியோமஞ்சானுமையிருதுணிதஞ்சூழ
மதியினுக்கமேயமாகிவத்திரபதமேயாதி
யதிகமாம்பவித்திரப்பேரட்டகஞ்சூழநாளும்
வதிவரம்விடத்தின்மிக்கவானமேவடிவாமீசா (உரு)

ஐயிருகுணிதம்விண்ணிலாங்காரமதன்மேலோங்கு
மெய்துமாத்திரைமனத்தோடிருவகையிந்தியங்க
ளையமில்சகலாண்டமுன்னயதாண்டகஞ்சூழ
மையுறுமகந்தைமேனிவானவரதன்மேன்மன்னும். (உசா)

சாற்றியவையெட்டாகுந்தானமிப்புவியுஞ்சார்ந்து
நீற்றணிதிகழுமேனிநிமலனுக்கிடமாமாங்கே
தோற்றியவுயிர்கள்வாழ்வோர்துறந்தவருடலந்தன்னை
யாற்றியபாவமெல்லாமகன்றுபோயவற்றில்வாழ்வார். (உஎ)

உன்னியவாங்காரத்திலொருபதுகுணிதமாகு
மன்னியபுந்திகாலைவருகதிரொளிகடுப்ப
நன்னலம்புரக்கும்புந்திநாயகியதன்மேல்வாழுந்
துன்னியபைசாசாதிதரிசகல்புவனஞ்சூழ. (உஅ)

புத்தியின்மேலெஞ்ஞான்றும்பொருந்துமுக்குணத்தைக்கற்
பத்தெனுங்குணிதமாகப்பகர்வரிந்திரநீலம்போல் [றோர்
உத்தமவரதனம்போலொளிவிடும்படிகம்போலா
மத்தகுபுவனமூன்றுமயனரியாரனும்வாழ்வர். (உகூ)

சாற்றியவெண்மூன்றாயதத்துவஞ்சகலர்க்கீயும்
மாற்றில்கொண்மூலந்தானுமையிருகுணிதமாகும்
வேற்றுமையின்றியுள்ளேவிளங்குமுக்குணத்தின்வெய்ய
கூற்றினையுதைத்தநோன்றாட்குழகன்வீற்றிருப்பன்மீதே. ௩௰

அதன்மிசைப்புருடனேடுமாகதத்துவந்தானேயுஞ்
சதமடங்கதிகமாகத்தருநிறங்குங்குமம்போ

விதமுறுவிக்குமிச்சாரூபமாமிராகதேவர்
மதமுறவதிவர்மீதேமருவியவித்தைதன்பால். (௩௧)

தந்திடுமராகந்தன்னிற்சதகுணமதிகமாகு
மிந்திரகோபமென்னவெழில்பெறும்வாமையாதி
செந்துவர்க்கனிவாயொண்கட்டிருமலிமாதர்சூழப்
பைந்தொடிவித்தைமாதுபாகுறவதனிலோங்கும். (௩௨)

கலையதன்மீதுநூறுகுணிதமாம்கருமைசெம்மை
நிலைபெறுவெண்மைபொன்மைநிறநிமிர்புருவர்செவ்வாய்
வுலைவறுகலையென்றேதுமொண்டொடியதனில்வாழுந்
துலையறுமணிபொன்னாரந்துகிரோடைச்சாந்தம்வேய்ந்தே.

சார்ந்திடுநியதிதானுஞ்சதகுணங்கலையிற்கால
மோர்ந்திடினியதிமீதேயொருசதகுணிதமாகச்
சேர்ந்திடுமஞ்சனம்போற்றிகழ்த்திடுமதனில்வாழ்வ
ரீர்ந்திடுமுயிர்கள்வாணாளெழிறிகழ்காலதேவர். (௩௪)

ஆயதோர்காலந்தன்னிற்சதகுணமதிகமாகு
மாயைதனிருளின்மாமைவருநிறமரிதாலம்பொ
னுயனாரநந்ததேவர்நணுந்தலையமர்வராங்கே
யேயுமிந்திரநீலம்போலெழில்பெறுமாயாதேவி. (௩௫)

கூறியமாயைமீதேயாயிரங்குணிதமாக
வேறிடுஞ்சுத்தவித்தையெழிறிகழ்கனகம்போலு
மூறிலாப்பதுமராகமொளிதிகழ்வித்தையாங்கே
மாறிலாதிருக்குமிக்கமந்திராதிபரும்வாழ்வர். (௩௬)

வித்தையிலீச்சுரந்தான்மேவுமாயிரமடங்காய்
சுத்தமாயொளிருஞ்செய்யசுடர்விழிகனல்கடுப்ப
வுத்தமகுணத்தரெண்மருறைதருவாங்கணாதி
சத்தனதாணைபுக்குஞ்சத்திசங்கரத்தினோடும். (௩௭)

கூறியவீச்சுரத்திற்குணிதமாயிரமென்றேது
மாறில்சாதாக்கியத்தின்மன்னிடும்படிகமென்ன

வீறுசேர்யோகபீடமேவிடுவிமலமான
ஆறிலாத்தருமமாதியோங்கியகால்களாக. (ருஅ)

ஐயிருநூறதானதளமுடையம்புயத்தான்
பொய்யறவதியுமீதேபுறவிதழெட்டும்போற்றி
மையறுவித்தையீசர்வதிவரிப்பீடமீதே
மெய்யுறுசித்தயோகர்விழைவொடுஞ்சூழ்வராங்கே. (ருக)

அத்தகுபீடமீதேயம்புயப்பொருட்டுநாப்பண்
டத்துவமெவையுமாக்குஞ்சதாசிவப்பிரமாங்கங்க
ளொத்துறவிபுவாயோங்கும்வியாபியாயுடனுநீங்காச்
சத்தியாமணுக்கடாமேதனுவெனத்தரித்துவாழ்வர். (சுo)

சத்திசாதாக்கியத்திற்சாற்றிடிலக்கமாகி
யொத்துறுமெவைக்குமேலாயோங்கொளியாகுமாங்கே
சுத்தநற்படிகமென்னச்சோதியாய்மருவவிந்தங்
கொத்துறுகடம்பிற்றோன்றுங்கொள்கையவடிவமென்ன. (சுக)

ஓங்கியசகளத்தோடேநிட்களமுபயஞ்சூக்கம்
நீங்கியகலையதென்றுநிமலவானந்தமான
தீங்கறுஞானமேனிச்சிவனுமைந்தாவன்றேறிற்
பாங்குறுசத்திபேதம்பகாமாதவத்தோய்கேட்டி. (சுஉ)

சகளமாம்சாந்திபாதிதகலையோடுஞ்சாரிற்சத்தி
யகளமாம்விந்துத்தானேயகிலமும்வியாபித்தோங்கி
லுகளமாஞ்சூக்கமொன்றிற்சுவாலினியாதியோடுந்
துகளறவெண்ணிரண்டாஞ்சுரங்களேற்பின்னவிந்து. (சுந)

மன்னியவதற்குமீதேமருவியாலம்பமின்றி
யன்னியமிலாமையெங்குமசலமாயகண்டமாகித்
தன்னிலைபகன்றுமேலாய்த்தாரகமாகியார்க்கு
முன்னியதோற்றநாசமொழிந்திடுஞ்சிவமென்றுன்னே. (சுசு)

கூடியவாறாறுதத்துவக்குழாமைந்தேழா
றுநான்காண்மவித்தைசிவமெனவறைவரைந்து

மீறிலாவுயிர்கட்கெல்லாவாக்கையுமியற்றலாலே
மாறில்சீர்பிரேரகாண்டமாமெனமதிப்பர்மன்னோ. (சரு)

அநித்தமாய்ச்சுத்தமாகியசுகமாயான்மாவன்றிச்
செநித்திடும்பொருள்களெல்லாம்திரியவேமறைகளாக்கி
துளிர்த்துமுன்வினைப்பயன்கணுகர்விக்குமாதலாலே
முநித்தவவெழும்போகசயித்திரமென்றன்னே. (சசு)

மானிடத்தேயுமூன்றுகுணங்களினுருவமாகி
யூனமில்புந்தியாதிகரணமாயுடம்புமாகி
மானமில்போகமுண்ணுமாதலான்மாயாபந்த
மானவாருயிர்கட்கெல்லாம்போக்கியமநான்காமே. (சஎ)

சொற்றகுந்தத்துவங்கள்சூழ்ந்துறுமொன்றையொன்று
மற்றவைகதலித்தண்டின்வடிவெனவதியுமாங்கே
யுற்றுணரேரண்டம்போலுரைத்திடுமண்டமெல்லாம்
பற்றியபுவனந்தானும்பயின்றிடுமிவைபோலெல்லாம். (சஅ)

தத்துவங்களையிற்சாரும்புவனமுந்தத்துவத்தி
லொத்துறுபுவனத்தின்கணுறையுமக்கரங்கடம்மிற்
மொய்த்துறும்பதம்பதத்தின்மொழியுமந்திரங்கண்மேவு
பெத்தமாறத்துவாவும்பிறங்கியவுயிர்கட்கன்றே. (சகூ)

ஈங்கிவைதத்துவத்தின்றெரிசனமிவற்றையெல்லாந்
தீங்கறவுணர்ந்துநாளுஞ்சிந்தனைசெய்வோர்கேட்போர்
பாங்குறுவித்தையாதிபதத்தினில்வதிந்தேயாவு
நீங்கிப்பிரளயத்தினிமலனேரென்னவாழ்வார். (ரு௰)

தத்துவதரிசனம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம். உகஉ.



## தத்துவசுத்தி.

### வேறு.

சிறப்புடையதத்துவத்தின்சுத்திதன்னைச்செப்புவங்கேளித்தாக்
தச்செய்திநோக்கி, பிறப்பவற்றிலவர்பெறுதிக்கும்பல்பேயாரும்
பிரளயத்துமுளமலைகள்பின்னமாகி, பிறப்பதன்றமாயையிடத்
தெல்லாமெய்த்தியிருந்துமவரவர்க்குள்ளதேயுமவரவர்க்கே, மறப்
பறவேசிவனுலேசுத்திசெய்யவல்லவர்கட்கில்லையிவைமதிக்குங்
காலே. (க)

### வேறு.

பூவறலனல்கால்வானம்பொலிகந்தமிரதரூபம்
பாவுறுபரிசஞ்சத்தமுபத்தமேபாயுப்பாத
மோவறுபாணிவாக்குமூக்கொடுநோக்குநோக்கு
நீவுறுதுவக்குச்கன்னதினைந்திடுமனமகந்தை. (உ)

புத்திமுக்குணம்பிரதானம்புருடனேயிராகம்வித்தை
யொத்துறுகலைமீதோங்குநியதியோர்காலமாயை
சுத்தமாம்வித்தைமாயேச்சுரஞ்சதாசிவமேசத்தி
நித்தமாஞ்சிவனேடிக்கநிகழ்ந்திடுமுறைமையிதால். (ங)

பூமுதல்கந்தமாதிமாத்திரைபுக்கொடுங்கு
மாமமாத்திரைகளைந்துங்கன்மவிந்தியங்களைந்து
நாமமார்மனத்திடுைடுஞானவிந்தியமுநாடிற்
றமதவிராசதம்பின்றைசதாங்காரஞ்சாரும். (ச)

புந்தியிலகத்தைபுந்திபொருந்துமுக்குணத்தைச்சித்தம்
வந்துறுமானின்மானுமராகமும்வித்தைதானும்
தந்திடுங்கலையைச்சாருங்கலையொடுநியதிகால
முந்தியபுருடனேடுமாயையிலொடுங்குமன்றே (ரு)

வித்தையீச்சுரத்தைமேவுஞ்சதாசிவத்தடங்குமீசஞ்
சத்தியிற்சதாசிவந்தானொடுங்கிடுஞ்சத்திதானு

மொத்துறுஞ்சிவத்திலெல்லாமொடுங்கிடும்விந்துவின்கண்
புத்திசெய்சிருட்டிதானுமீதுபோற்புகலுநூலே. (௬)

அடங்கிடுமறுநான்காயதத்துவமான்மாவுள்ளே
யடங்கிடும்வித்தைநாப்பண்ணராகமுன்னையவாறு
மடங்கிடும்விந்துநாதத்தழகியவித்தையாதி
யடங்கிடும்விந்துநாதமகிலமுமாயைதன்னில். (௭)

மண்முதற்சிவமீறாகமருவுதத்துவமனைத்து
முண்மைமாமாயைமாயையுள்ளுறைந்துதித்தொடுங்குந்
திண்மையங்குரங்கள்பாரீர்சேர்ந்தெழுந்ததனின்மீள
வண்மையிலொடுங்குமாபோன்மாபரன்கருணையாலே. (௮)

வேறு.

சிவமொடுநற்சத்திசதாசிவமீசம்வித்தை
செப்பரியமாயைகாலநியதிகலையுற்
பவமுறுசீர்வித்தையிராகம்புருடன்மூலம்
பயின்றுய்ருகுணம்புந்தியாங்காரமனத்தோ
டவமுறுநற்செவிதுவக்குவிழிநாக்குமூக்கொ
டழகியவாக்குப்பாணிபாதபாயுபத்த
முவமையில்சத்தம்பரிசரூபரசங்கந்த
மோங்கியவான்வளிதீநீர்பாருதிக்குமுறையே. (௯)

வேறு.

சொற்றருந்தத்துவத்தின்சுத்தியையுணர்ந்ததூயோ
ருற்றுமேற்பரபோகந்தாமுண்டெலாமொடுங்குங்காலம்
பற்றுடல்கழியமேலாம்பரமனைப்போலானந்தம்
பெற்றவர்பெருமையெம்மாற்பேசலாந்தகைமைத்தாமோ. (௰)

தத்துவ சுத்தி முற்றும்

ஆகத்திருவிருத்தம் ௨௨௨.

—oo:o:oo—

## ஆன்மரூபம்.

### வேறு.

அறைகுவங்கேளணுருபமலினனாகி
யறிவுசிறிதுறமாயைக்கடங்கிவீயா
துறைதருநற்சேதனனாய் வியாபியாகி
யுடம்பாதியியற்றியிடக்கருத்தாவாகிக்
குறையறுநற்புற்கலன்பொருளினாலே
கொடுவினைபோய்ச்சிவமாவனடைவேமுன்னை
முறைதிகழ்பேர்பசுவான்மாப்புருடனாதி
மூவகையாமவத்தையினில்மொழியக்கேண்மோ. (க)

### வேறு.

தோற்றியவுருவத்தோடேதொழிலறிவிச்சையின்றி
யேற்றமாமுதன்மையின்றியெங்குமாய்நித்தமாகி
மாற்றரும்போகமுன்னிமாயையின்வயிற்றுண்மன்னிச்
சாற்றியமலத்தினோடுஞ்சார்ந்திடுமுயிர்களெல்லாம். (உ)

அந்நிலையமர்ந்தவாவிக்கரனருள்கலைவந்தெய்தி
மன்னியதொழிலுண்டாக்குமருவியவித்தையீயும்
தன்னியல்பாகுஞானஞ்சாற்றியவிடயத்திச்சை
யுன்னுவித்திடுமராகமுறுவிக்குங்குணங்கள்மூலம். (௩)

கழிபெரும்புந்தியாதிகரணத்தோடொன்றியான்மா
வழுவறநியதிதான்செய்வல்வினைநியமத்தோங்கப்
பொழிதினையளிக்கக்காலம்பூதவாக்கையினிற்போகங்
குழுவியகருவியாலேகொள்ளுமாறுரைப்பக்கேண்மோ. (௪)

பொறிவழிமனம்போந்துற்றபொருளினைப்புறத்துநோக்கி
யறிவுறுதையஞ்செய்யவகந்தைவந்தபிமானிக்க
நெறிதருபொருளைப்புந்திநிச்சயம்பண்ணுமானிற்
பிரிவுறுகுணங்களாலேபெறுஞ்சுகதுக்கமோகம். (௫)

பொருந்திடும்புருடனுலேபோகவுன்முகனுயாங்கே
யிருந்திடவிராகமேன்மேலிச்சித்தபொருளைவித்தை
தரும்பொழுதளிக்கக்காலந்தகைந்திடநியதிபோக
மருந்திடுங்கலையான்மாயையான்மயங்கியசீவான்மா. (௬)

காலமந்தரமதாகக்கருமங்கள்சமமாங்கால
மாலமுண்டவன்றன்சத்தியணைந்திடுமாதலாலே
சீலமுண்டாயஞானதேசிகன் தீக்கைசெய்ய
நீலமாமலமுநீங்கநிமலனேராகுமான்மா. (௭)

வேறு.

சொற்றருங்கேவலசகலசுத்தமூன்றிற்
றுடக்குறுமாருயிரென்றேமூன்றுபேத
முற்றிடும்விஞ்ஞானகலரிருவராவ
ரொருவர்நுகமர்ந்தவர்களொருவருள்ளார்
மற்றவருளிலர்களனந்தேசராதி
மந்திரர்களெழுகோடிமலங்கண்மங்க
ளுற்றபிரளயாகலன்றியுரைப்பக்கேணீ
யோங்கியதோர்மலபாசமுறுதலாலே. (௮)

சிலரையநந்தேசர்தனுவாதிகூட்டச்
சிவனவர்கட்குள்ளதொழின்ஞானமீயக்
குலவுபுவனுதிபராய்ப்பிரமாண்டத்துங்
குணத்தினுமேற்புருடனினுங்கலையின்மீது
நிலவுவர்கண் மற்றையவர்வினையிற்கேற்ப
நீடுபுரியட்டகத்தோடுழல்வரெல்லா
வுலகுதொறுமவனிமுதற்கலையீறுக
வொன்றியதவ்வட்டகந்தானுரைக்குங்காலே. (௯)

சகலர்திரிமலத்துள்ளார்மலபாகத்தாற்
சங்கரன்றன்கருணையினுற்குரவனுகி

யகலமலந்தீக்கையினலாறுருய
வத்துவாத்துடக்கறுக்கவவன்போலாவ
ரிகலவினைநரகமொடுசுவர்க்கமெல்லா
மெய்திடுவராமற்றவர்நற்றவத்தின்மேலோய்
புகலுமணுமூவகைக்குஞ்சகசமாகிப்
பொருந்தியதோர்பாசமினிப்போற்றக்கேணீ. (௰)

[illegible]
மன்னியதோராணவந்தானென்றுகிச்சத்தி
பலவிதமாய்ச்செம்பிலுறுகளிம்பேயென்னப்
பசுவெவையுமகலாதுவியாபித்தோங்கு
மூலவுருணமேழுவற்றுளதிகமாக
வுரைக்கின்மலம்பசுத்துவமஞ்ஞானமூர்ச்சை
நலமதிலாவவித்தைதம்மாவிருதிமறைப்பு
நாடிலிவைபரியாயநாமமாமே. (௧௧)

வேறு.

சாற்றியகன்மந்தானுயிருவிதர்தன்மாதன்மந்
[illegible]
யாற்றுநீரொழுக்கம்போலவனுதியாய்மலத்தினலு
[illegible] (௧௨)

மறப்பறியாமையாதிமயக்கமுஞ்செய்யுமாயை
சிறப்பின்மாயேயஞ்சென்மவேதுவாயதனிலன்றே
பிறப்புறும்வனியந்தங்கலேமுநற்பெண்டீர்மக்கள்
வெறுப்புறுசாதியாதிவிகற்பமாம்விளம்புங்காலே. (௧௩)

திரோதமாமலமென்றேதுஞ்சிவசத்திதன்னைத்திய
விரோதமாமலங்களெல்லாமேவியீதியற்றலாலே
[illegible]
[illegible] (௧௪)

ஐவகைமலத்தினோடுமன்னியமாகிநீங்கா
மெய்யுறுமான்மரூபமுழுவதுமுணர்ந்தமேலோர்
துய்யநற்போகமுற்றுந்துய்த்தெலாமொடுங்குங்கால
மெய்யுறுஞானானந்தமேவிவீற்றிருப்பரன்றே. (௧௫)

ஆன்மரூபமுற்றும்

ஆகந்திருவிருத்தம் ௨௩௭.

—○○—

## ஆன்மதரிசனம்.

தெரிசனமுரைப்பக்கேணீசெப்பியவான்மாவின்ற
னெரிகதிரொளியிற்காந்தத்திலங்கியவாறுபோலப்
பரிவொடுகுரவன்றோன்றப்பண்டுளஞானச்செய்தி
துரியமாமவத்தைதன்னிற்றோண்டிடிற்றானுந்தோன்றும். (௧)

தத்துவத்தொகையுஞ்சாற்றுமணுக்களுந்தன்னுட்டானே
யொத்தறிந்தெவையுமாகியுயிர்த்தன்மைநீங்கிநீங்கா
நித்தனைப்பிறப்புமில்லாநிமலன்றான்றானேயென்று
புத்திசெய்திடுவன்பஞ்சவவத்தையைப்புகலக்கேணீ. (௨)

சாக்கிரமுதலாயைந்துஞ்சாருங்கீழ்நடுவுமேலு
மாக்கியதத்துவத்தையணுவினையமலன்றன்னை
நோக்குவமேலேயுள்ளவவத்தையினெய்யபோகந்
தேக்கியுமருண்டுநிற்பர்சேர்ந்துகீழ்நடுவவத்தை. (௩)

ஏழைந்தையைந்துமூன்றோடிரண்டொன்றுஞ்சாக்கிராதி
வாழ்தலம்புருவங்கண்டமார்பகாபிகோசஞ்
சூழுறுசாக்கிரத்திற்றுய்த்திடும்விடயமெல்லா
மாழியசொப்பனத்திலருந்துமாபோலத்தோன்றும். (௪)

மன்னியசோத்திராதிவாக்காதிவாயில்பத்தும்
பின்னமில்விடயம்பத்தும்பிறங்குமுட்கருவியைந்தும்
துன்னியவாயுபத்துஞ்சூழ்ந்திடுஞ்சாக்கிரத்தி
லுன்னியசொப்பனாதிக்குறுமுறையுணர்ந்துகொள்ளே. (௫)

தூலமேசூக்கம்பின்னையதிசூக்கஞ்சூக்கமேலு
மேலுமாஞ்சூக்கமென்றேபியம்புவர்சாக்கிராதி
சீலமார்பிரத்தியாகாரந்தாரணைதியானத்தாலு
மேலதாஞ்சமாதியாலும்விசயமாமீசனாலும். (௬)

வெளியொடுட்கரணத்தாலுமனுவதன்விடயங்காண்ட
றெளிவுறுசாக்கிரந்தேர்சுவணமுட்கரணத்துள்ள
களியுறுவிருத்திகாண்டல்காயவிந்தியங்கணீங்கி
யொளியுறுமவசங்கோடலுரைத்திடிற்சுழுத்தியாமே. (௭)

துரியந்தேகேந்தியத்தின்றடக்சறுத்துயிருணீங்கா
விரிவுறுஞானமேவன்மேற்படுசிவோதயந்தா
னுரியதோர்துரியாதீதமுணருமேலவத்தையைந்தும்
பெருகிடும்விரிக்கிலின்னும்பேசுவங்கேட்டிமேலோய். (௮)

தத்துவமிருபத்தைந்திற்சங்கரன்றன்னைக்காண்ட
லுத்தமசாக்கிரந்தானுணர்தல்சொப்பனமேலைந்திற்
சுத்ததத்துவத்திற்பார்த்தல்சுழுத்தியாமுயிருணோக்க
வத்தகுதுரியமீதேயறிந்திடலதீதமாமே. (௯)

இருதயத்துள்ளுங்கண்டத்திடையிலுந்தாலுமேலு
பிருகுடிநடுவுமேலும்பிரமரந்தரத்தும்பேணி
மருவிடுஞ்சாக்கிராதியவத்தையின்மாசுநீங்கிக்
குருவருளாலேதன்னைக்குறித்திடல்கூறக்கேணீ. (௰)

வேறு.

ஓங்கொளியவன்மனையினதீதந்தன்னி
லுற்றிடுமொருயிர்தன்னைச்சரீரமின்றி

தீங்கறுமெய்ஞ்ஞானவிழியாலேபார்க்கிற்
சிறப்புறுமப்பொழுதுமிகுசாந்தமாகி

நீங்கரியவாசையறவெங்குமாகி
நின்மலமாய்ச்சேதனமாய்க்கருத்தாவாகிப்

பாங்துடையபதித்துவந்தான்பசுவுக்குண்டாய்ப்
பரமனைப்போலெங்குமாய்ப்பதியுந்தானே. (௧௧)

செப்பியவிச்சிவத்துவந்தானுயிர்கட்கெல்லாஞ்
சீருணர்த்திலடங்கியிடுங்கனகம்போலக்
கப்பறவேயுளதன்மேறதுளிநைசீவக்
கரைவுருவாய்க்களிம்புகாறுவாபோல்
ஒப்பறுசீர்ச்சிவன்குருவாய்ப்பரிசஞ்செய்ய
வுறுமலந்தீர்ந்தருளுவன்பசுவாகான்பின்
றிப்பியமாமரணிதிக்கடையத்தோன்றுஞ்
செந்தழல்நெய்யவையாகாத்திறனேபோல். (௧௨)

சித்துருவாஞ்சிவனுமியானெனவேகண்டு
தெருண்டவர்கள்பரமுத்திசேர்ந்தபின்னைத்
தத்துவங்கடமைமுறையேயொடுக்கிநாதன்
றனையறியவுயிர்களிளைப்பாற்றுங்காலத்
தொத்துறுஞ்சச்சிதானந்தத்தோடேயொன்றா
யொருவாததிருவோடுமுற்றுவாழ்வர்
முத்தனுயர்திருவருளாலான்மசுத்தி
மொழிகுவங்கேளருள்வழியின்முயல்கின்றாயே.

ஆன்மதரிசன முற்றும்
ஆகந்திருவிருத்தம் ௨௫ய.

---

## ஆன்மசுத்தி.

அறியவோர்நாமமின்றியாலம்பமின்றிப்பற்றிச்
செறியவோர்தானமின்றிச்சிந்தனையிறந்துமேலாய்க்
குறியொடுகுணமுமில்லாவுருவொடுங்கூடியொன்றாய்
நெறிதருமருவினாலேலீத்திடுஞ்செயல்களெல்லாம். (௧)

பாசபந்தத்தினாலேசீவனும்பாசம்போனா
லீசனேயுயிரேயாகுமியைந்திடுங்கன்மத்தாலே

நாசமேமல்வினைகளெல்லாநாதனுமலத்தினாலே
[illegible] (உ)

[illegible]
[illegible]
றினையுவையிரண்டுநீங்குநின்மலனருளினாலே
யுனைமலமகலுபாயமுத்தமருணத்தேதாய்கேட்டே. (௩)

இரண்டெழுத்தியமனுசுமியைந்திடுந்துன்பாலின்பாற்
[illegible]
முரண்டகுமிரண்டைநீக்கிமூன்றினையுணர்குவாயே
[illegible] (௪)

[illegible]
தனதெனுமுணர்வைநீத்தோன்சாருவனின்பமுற்றுந்
தினமொருகோழிபூனைசேர்ந்தனன்றுயரம்வீட்டின்
முனமுறுமபிமானந்தான்மூடிகமீந்தாலுண்டோ. (௫)

பெத்தமுமுத்திதானும்பின்னமோவுன்னிலென்று
[illegible]
சுத்தனேநினதொன்றின்றிச்சூழறிவாகுமுத்தி
[illegible] (௬)

[illegible]
குருவருண்ஞானவாளாற்குறைத்துயிரண்டுங்காய
மொருவிடவெங்குமாகியுஞற்றிடுஞ்சாந்திதன்னை
மருவுதலான்மசுத்திவல்லவர்முத்தராவார். (௭)

ஆன்மசுத்தி முற்றும்.

ஆகத்திருவிருத்தம் உ௫எ.

# தசகாரியம்.

## சிவரூபம்.

செப்புவங்கேடுகடீரறிவின்கேள்வசிவரூபமுயிர்கடொறுஞ்
செறிவதாகி;யொப்பருசீர்விந்துவினுமாயையுள்ளுமோங்கொளி
யதத்துவத்துநீங்காதொன்றி,மெய்ப்படுபேரறிவாகிவிமலமாகி
வியாபகமாயருவுருவமிரண்டுமின்றித்,தப்பறுசீரானந்தவுருவ
மாகித்தருப்பணத்தினிழல்போலச்சாருமெங்கும். (க)

## வேறு.

சயம்புமாலானேயீசன்சதாசிவம்விந்துநாதம்
பரந்தருள்சத்திமேலாம்பரசிவமொடுங்குந்தானம்
வியந்திடுநிருத்தானந்தமெய்ம்மைகொள்குருவுரூபம்
முயர்ந்திடுவொணிற்சாபமுமுருகுநெய்க்கனலும்போலும். (உ)

வன்னியுமொளியும்போலமருவியவணுக்கடாமே
சென்னியுமுகமுமற்றுஞ்சிறந்தபல்லுறுப்புமாகி
மன்னியஞானியோகிமந்திரிகிரியையோனு
முன்னியுட்புறத்தும்பூசையுஞற்றிடவமர்ந்தவன்றே. (௩)

மாயைதானென்பர்சில்லோர்மருவியவிந்துவென்ப
ராயதோர்நாதமென்பரதனின்மந்திரமேயென்பர்
தூயதோர்சத்தியுள்ளேதோன்றியவுருவமென்பர்
நாயகனருளாற்கூறுமாகமநயந்திடாரே. (௪)

எஞ்சலில்யோகயோகிக்கிறைவராமிறைவற்கென்றும்
பஞ்சமந்திரங்களாலேபுகன்றிடுதனுவும்பார்க்கிற்
றஞ்சமாவரணமின்றிச்சார்ந்திடுஞ்சாத்துவியென்
றஞ்சலிமறைகளோடேயாகமமனைத்துங்கூறும். (௫)

சிவனுருவெவைக்குமேலாய்ச்செப்புமந்திரங்களன்றா
யவமுறுமலமுமின்றாயணுமயமாகியென்று
முவமையாதாரரூபமோங்குமாலம்பமின்றிப்
பவமுதலகன்றேயெங்கும்பதியுமெட்டயிலம்போல. (௬)

படிபுகழீசானுதிபஞ்சமந்திரங்களாலே
முடிமுகமிதயங்குய்யமூர்த்தமுமாக்கா முன்னில்
வடிவுறுமந்தராங்கமந்திரமிருதயாதி
யடிகளிம்மனுவும்பின்னவனுவெனவறிந்திடாரே. (எ)

உள்ளுறுகரணமாகவுறைவனவரனுக்கன்றே
தெள்ளியவாரணீயுஞ்செனனியுமரோதைதானு
மொள்ளியவாகமத்தாலுணர்ந்திடும்பெரியோர்போற்றிக்
கள்ளியஞானத்தோர்க்குக்காணலாந்தகைமைத்தாமோ. (அ)

எங்கணும்பாதம்பாணியெங்கணும்விழிமுகங்க
ளெங்கணுஞ்சோத்திராதியேனையதானநண்ணி
யெங்கணுமாவரித்தேயிருந்திடுமிறைவன்றன்னை
யெங்கணுமாகுமுன்னுளிரண்டறவெண்ணிடாயே. (௯)

இப்படிச்சிவரூபத்தையிரண்டறவுயிரினுள்ளே
யொப்பறுகுரவன்கூறவொருமைகொண்மனத்தினாலே
தப்பறவுணர்ந்தமேலோர்தாமவனுவர்மீளா
ருப்புறுபவ்வநீரோடோடைநீருற்றதென்ன. (௰)

சிவரூபமுற்றும்.

ஆகத்திருவிருத்தம் உ௱எ.



## சிவதரிசனம்.

அரனெனுங்கதிரோன்சத்தியழகுறுவிளக்கத்தாலே
வரமுறுஞானநோக்கான்மலமுதலகன்றவான்மா
பரனெனச்சத்தியாதிபலவொடுமுயிருட்பார்த்தல்
திரமுறுதவத்தின்மிக்கோய்சிவதரிசனமீதாமே. (க)

ஓங்கியவுருவமுண்டென்றுரைத்துமுன்னதனையின்னுந்
தீங்கறத்தரிசியென்றேசெப்பினைதேவதேவ
வாங்காரற்குருவமுண்டோவவித்தைமுன்னடையாதாகிற்
றூங்கிடுமுருவமென்னிற்சகளனுமணுக்கள்போல. (உ)

புருடனுக்காகயாரும்பொருவிலானுருவந்தன்னை
மருவினனதுவுநல்லமந்திரவடிவமாகுந்
தெருடருமனுவுமிக்கசிவசமவேதைநம்பொன்
மருடருவடிவோவெல்லாமாயினுமாசற்றாயே. (௩)

ஒத்துருசத்திதானேயுருவமாய்த்தோன்றுமென்னில்
வைத்திடும்பரிணாமந்தான்மருவுமானந்தமாகி
நித்தமாம்த்துவாவினிகழ்ந்திடுமாறதின்றாஞ்
சித்தரேபோலவெல்லாவுருவமுஞ்செறிவன்றே. (௪)

ஆதியுநடுவுமீறுமகன்றெலாமறிவனாகித்
நீதில்பூரணனாயுள்ளோன்சிவனெனவுணர்ந்துநோக்கிற்
சோதிசெய்திடுவன்முன்னைத்துகளறவறிஞர்க்கீச
னோதியவமலனின்றேலுலகினுக்குநயமுண்டோ. (௫)

சேதனமல்லமூலஞ்சிற்றுயிர்க்கறிவொன்றில்லை
யோதியப்ரமாணுத்தானுள்ளதேலதுவுமாங்கே
தீதுறுஞ்சேதனத்தாற்சகமிறையருளையின்றிக்
கோதறவுதியாதாகுங்குலாலனில்கடங்கள்போல. (௬)

துணைவயித்தியனையின்றித்துன்புறும்பிணியன்போன்று
மணைவுறுமிரவியில்லாதழுங்கிடுமுலகம்போன்றும்
பிணையெனவெருண்டவொண்கட்பிறைநுதலிறைவியோடே
யிணையுறுசிவனையின்றியிடருறுமுயிர்களெல்லாம். (௭)

எவனரனிடத்தேயெல்லாமிருந்திடவெங்குமாகும்
பவனையப்பொருளனைத்தும்பதிந்திடுமாறுபார்க்கு
மவனுயிரிடத்தேயீசனமர்ந்திடுமவனுமென்றுஞ்
சிவனிடத்துறையுநீயுஞ்செறிந்தவையறிந்துபாரே. (௮)

நற்றவத்தலைவரெல்லாம்ஞானமேயாதியீசற்
குற்றிடுங்குணங்களாறுமுறைசெயவேண்டுமென்னச்
சிற்றுயிர்பாசநாசஞ்செறிந்தத்துவஞ்சிருட்டி
முற்றமுற்றுணர்தலாலேமுழுதுணருடையானென்பர். (௯)



ஒக்கியபொருள்கண்முற்றுமுடையநூயுலகுக்கெல்லாந்
நிற்கறுசார்புமாகிச்செறிந்திருந்தார்போன்றின்றி
யாக்குறுபொருளனைத்துமடைந்தென்றுநிறைதலாலே
பாங்குறுதவத்தோரீசன்பரிபூரணனென்றே. (௰)

அனாதியாயியல்புமாகியனைத்துளவுயிர்கட்கன்றே
தனாதுசிற்சத்திதன்னாற்றானறிந்தியற்றலாலே
மனாதியினறிவுக்கெட்டாவரம்பிலாவறிவனாது
மெனாதியையனாதிபோதனென்றிபலனைத்துங்கூறும். (௧௧)

சாற்றுமூவுலகத்தோடேசராசரஞ்சகமனைத்துந்
தோற்றுவித்தளித்துப்போக்குந்தொழிறனக்குரிமையாலே
தேற்றமாமறிவான்மிக்கசெழுந்தவதேவதேவ
னாற்றல்கொள்சுதந்தரத்தோனெனவுரைநவர்மேலோர். (௧௨)

நித்தமாய்த்தோற்றமின்றிநிலைபெறவெவையுந்தானே
சுத்தனாயறிந்தெவர்க்குஞ்சுகத்தினையுதவித்தோய்ந்தும்
வைத்திடும்பொருள்களெல்லாமாய்ந்திடாதமர்தலாலே
யத்தனையவுத்தனென்றேயாகமமனைத்துங்கூறும். (௧௩)

தனாதியுநடுவுமீறுந்தவிர்ந்துமுன்னொருவராலு
முனாதகற்சத்தியென்றுமுலப்பிலாவாதலாலே
யெனாதியையனந்தனென்றேயியம்புவரிந்தவாறு
மனாதியாமாலுக்காதியனாவுக்காவரணத்தாலே. (௧௪)

தெரிவுறவிராகுகேதுசெங்கதிர்மதியினுள்ளே
மருவிடக்காணுமாபோன்மற்றவன்றன்னையுன்னு
மொருவிடாதுணர்ந்துநோக்கியுடந்தையாயவன்போலன்றே
பிரிவுறுவறிவானந்தம்பெறுவைசியுறுதியாமே. (௧௫)

சிவதரிசன முற்றும்

ஆகத் திருவிருத்தம். ௨௮௨,

—

# தசகாரியம்.

## சிவயோகம்.

காண்டகுசிவன்போலுன்னைக்கருதியேயவனோடொன்றாய்ப்
பூண்டுநின்றிடுதலன்றோபொருவறுசிவயோகந்தா
னீண்டி[illegible]தறிவான்மிக்கவிருந்தவவுற்சாகாதி
மாண்டசாதனங்களாறும்வல்லையேலொல்லைவாய்க்கும். (௧)

எங்கணுமடைந்தோன்றேவனேனையவுயிர்களெல்லாந்
தங்குவானெங்குமாயதத்துவரூபன்றானு
மங்கணனமலநித்தனாமயனறிவான்மிக்க
செங்கண்மாலயனுங்காணாச்செழுஞ்சுடரோனுநானே. (௨)

கலையின்றாய்ஞானமாகிக்கருதுநிச்சயமாய்வீயு
நிலையின்றாய்விகற்பமின்றிநிமலமாயேதுவோடே
மலைவறுவொப்பின்றாகிமருவியகுறியொன்றின்றா
யலைவறுசாந்தமாதியாகியபொருணான்றே. (௩)

மந்திரவடிவமானவானவனானேயெல்லா
மந்திரங்கடந்தோன்யாண்டுதோன்றிடாவடிவமானோன்
முந்தியசராசரங்கண்முழுவதும்வியாபித்தோங்கு
முந்தியவுலகமெல்லாமுதித்திடுவிப்போன்றானும். (௪)

அவமுறுமனேககோடியாகியபுவனஞ்சூழுஞ்
சிவமுதலவனியந்தஞ்செறிந்ததத்துவங்களெல்லா
மவமுறவுறையுமென்னுமாக்குவனவற்றுள்யானு
முவமையில்சராசரங்கட்குள்ளினும்புறத்துமுற்றே. (௫)

சீவனான்சிவன்வேறாகுஞ்சிறந்தவான்மாவென்றேதும்
பாவனைமோகத்தாலேபயில்குவார்சிவத்துவத்தை
மேவிடார்சிவன்வேறாகும்வேறியானென்றிடாதே
யோவறவவனானென்னுமொற்றுமைபுணர்ந்துநோக்கே. (௬)

தன்னையேசிவனென்றெண்ணித்தானவனாகிவேறற்
றுன்னவேசமரதத்தாலுதித்திடுமரனோடொன்றிப்

பின்னமில்குணங்களெல்லாந்தன்னுளும்பிறங்கலாலே
யன்னியனுயிர்நோக்கென்னவங்கியன்பாலிற்பால்போல். (எ)

இன்னதோர்முறைமைபாலேயெய்திடுஞ்சிவத்துவந்தான்
மன்னியமலத்தினாலேமாழ்கியுள்ளடங்கியான்மா
தன்னையுமறியாதாகுந்தற்பரன்கருணையாலே
யுன்னுவித்திடவுண்ணேக்கியுடந்தையாயுறைபுமன்றே. (அ)

உற்றிடுஞ்சிவனுனென்றேயொற்றிடுஞ்சித்தாந்தத்தின்
மற்றையவதுநானென்றேமறைமுடிவதனிற்கூறுங்
கற்றவரிரண்டுமொன்றாய்க்கருதுவர்மலம்போங்காலஞ்
சிற்றுயிர்த்தன்மைநீங்கிச்சிவத்துவம்பெறுதலாலே. [கூ]

வேறு.

என்றியம்புஞ்சிவயோகத்தியல்பையெல்லா
மியல்புடையகுரவனடியிறைஞ்சிக்கேட்டு
நின்றவர்களிவ்வுலகிற்சீவன்முத்தர்
நிறைந்ததவரவர்பெருமைநிகழ்த்தலாமோ
கொன்றிடினுமர்தணர்களாதியோரைக்
கூறிடினும்பொய்களவுட்கொள்ளும்போதுஞ்
சென்றிடினும்விடயமெனுவேலைநாப்பண்
சிறந்தானையொருபொழுதுமறந்திடாரே. (ய)

சிவயோக முற்றும்.

ஆகந்திருவிருத்தம் உகூஉ.

—∘∘—

சிவபோகம்.

செப்புவங்கேளருந்தவரிற்சிறந்தமேலோய்
சிவபோகமுணதுமனங்கொடுதருளுமாற்று
லொப்பரியசிவனிவனேடுடந்தையாகி
யொளிவிடுங்காண்மலபாசவிருள்களோடத்
தப்பறவேநின்மலமாம்பரமானந்தந்
தான்பிரகாசிக்குமங்கேசமமதாக

வப்பொழுதேயிவனவனோடொன்றியெங்கு
மமர்ந்திடுவனறிவுதொழிலிச்சையோடும். (க)

வேறு.

தாதனுனென்றெந்நாளுஞ்சாற்றுதலதிகமோக
மீதலவதுநானெனன்றேயியம்புதல்பிரமையாகு
மோதிடனுனேயெல்லாமெனவுணர்ந்திடுதலுள்ளே
நீதுறமயக்கமூன்றுஞ்செறிந்திடாதறிந்திடாயே. (உ)

வேறு.

நித்தியமாமானந்தவுருவத்துள்ளேநீங்காதேதாங்கிடுகநிமலமாகிச
சத்தியமாய்ச்சூனியமாஞ்சிவாநுபூதி தான்பிரகாசிக்குமுன்னுட்
டருமதிதி, யுத்தமனேயூமனுணர்களுப்போலாகியுணராதேதயுணர்
தல்சிவபோகமாகு, முத்தநிலைதானுமிதுமோனமானமுடிவிலா
நிரதிசயமொழியுங்காலே. (௩)

வேறு.

ஞானவாசாரந்தன்னைநவிலுமாகேட்டிநல்ல
தானமார்கன்மாசாரஞ்சாத்திராசாரமென்னே
யீனமில்சமயாசாரமென்செயவுலகாசார
மானவாசாரந்தானேயறுதலாசாரமாமே. (ச)

வேறு.

செய்திடுநற்சிவபூசைவணக்கமின்றிச்சிறந்தசெபந்தியானமுதல்
செறியாளுகி,மையலறவேயத்தேயடங்கிப்பின்னைமதியாதே
யொன்றினையுமதிக்கவீது,வெய்யபசுக்கறக்குமளவாதலம்பு
வீழுமளவாதல்விழியிமைப்போதாகி,யெய்திடுவரேலொருகாலப்
பரபதத்திலொன்றுயிறந்துபிறந்திருநிலத்துமியைந்திடாரே. (ரு

வேறு.

அகலமாமாகாயத்தினமர்ந்தசோர்ஞானந்தித்தன்
விகலமாயுநியானத்தமேவிடான்சந்திதன்னை

யிகலறவியற்றுமாமாறெந்வனமென்றென்றெண்ணி
முகில்சொரிநீத்தமின்றிமுடித்துநீசந்தியெல்லாம். (௬)

ஆதியிற்பசுபாவத்தையகன்றுநற்பதிபாவத்தாற்
கோதறவுறைதருனேகூடுதலென்றுங்கூறு
மீதிலாச்சிவனோடான்மாவியைந்திடுமாறதெங்ஙன்
றீதறவெங்குமானென்சேரவேறிடமுமுண்டோ. (௭)

சற்றையஞ்சடிலக்கோமான்கழலிணைநீழல்சேர்ந்து
முற்றுணராதியாகமொழிதருங்குணங்களெட்டும்
பெற்றரன்றன்னையுன்னிப்பிறங்கியவுயிர்கடம்மைத்
தெற்றெனவுணருமன்பேசிவபோகந்தருங்காலே. (௮)

திங்கறுசிவபோகத்தைத்திளைத்தவர்விழிகளாலும்
பாங்குறுமொழிகளாலும்பதமலரானுஞ்செப்ப
வோங்கியகரங்களானுமுலகெலாஞ்சிவமாமென்று
லாங்கவர்பெருமையெம்மாலளக்கலாந்தகைமைத்தாமோ. (௯)

புரையறுவேடமீசன்பொருந்துமாலயங்களெல்லா
முரையுணர்விறந்துமேலாமொருவனதுருவமென்றே
தரையினிற்றொழுதுபோற்றித்தற்பரவடிவாய்வாழ்வர்
கரையிறந்தகன்றஞானக்கடலமுதருந்தினோரே. (௰)

சிவபோக முற்றும்.

ஆகந்திருவிருத்தம் ௯௩௨.

ஸ்ரீதியாகேசன்றுணை.

முற்றும்.



௨

திருச்சிற்றம்பலம்.

தசகாரியம்

# அருப்பதவுரை.

—∘∘≈∘∘—

காப்பு:—உழிதரல்=சுற்றல். வியந்த-அதனுற் சுற்றிய தேகமாகிய ஒங்கலில்; மதக்கலுழி—மதச்சேறு. நால்வாய்—தொங்குகின்றவாய்; பொருப்பு—விநாயகக்கடவுள். விருப்பஞ் செய்தல்—வணங்குதல்.

(2) பெரிய அண்டமே முடியாக; ஒரு மூன்று சுடர்—சோமசூரியாக்கினி.

பரமுத்திக்கான தொழிநடனம் செய்தல்=ஆனநடமைந்த கள சகளத்த—ரானநடமாடி யைங்கருமத்தாக--வானதொழில ருளாலேங்தொழிற் செய்தே--தேன்மொழி பாகன்றிரு நடமாடுமே என்பது திருமந்திரம், இப்படி நடனஞ்செய்வோனுக்குப் பரிசு அறிஞர் மலமாதி நீங்குதல். பாட்டினயத்தைக் கவனிக்க.

(3) இறைவனது வியாப்பியமே, சிற்சத்தி என்பது தோன்ற விறையுருவா மென்ருர்.

(4) நந்தீசாதி—நந்தி யெம்பெருமான் வழியினரானசனக, சநந்தம சநாத, சநற்குமரர் முதலாய சந்தான குரவர்கள்.

(5) ஊரும் பேருவடிவு மில்லாதவனுய் சோடசகலைக ளினந்தியமான உன்மனுந்தகலையிற் றங்குஞ் சிவபிரானுடைய திருவடி நிழலையடைந்த, மலங்கன்மமாயைகளை அறவேவிட்ட சத்திய ஞான தரிசனிகள் ஆன்மாக்கள் ஈடேறும்பொருட்டுச் சிவபுரத்தி லவதரித்தனர். சைவசமயிகட்கா சாரியர்களாயிரு

க்கும் திருக்கூட்டத்தாருள் ஓர் வகையினரைச் சத்தியஞானிக ளென்று கூறுகின்றனர். இச்சச் சத்தியஞான தரிசனிகள் பேரிற் பிள்ளைத்தமிழொன்றிருக்கின்றது. பின்வரும் பாவிற் கூறிய சந்திர சேகரனென்பார் இவ்வம்சத்தினரே. சித்திசேர் வெண்ணை மெய்கண்ட—தேசிகன் பத்திசேர் மரபினைப் பரித்த பண்டிதன்—முத்திசேர் சிவபுர முதல்வ னெம்மையாள்—சத்திய ஞானிதன் சரணம் போற்றுவாமென்பது சிவபுரா ணியத் தெளிவு.

(5) மாக்கள் சார்புகொடுவந்து=மனித ரூபமாக வந்து.

உண்மை தெருண்டதவர்=உண்மையை அறிந்த சிரேஷ்டர்கள்.

மனாதி மனம், புத்தி, யகங்கார, சித்தம். சிவபிரான் அளவிடப்படாதவர்

(7) எண்குணம்=ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறி யடக்கலென்னுங்குணங்கள் எட்டு. வினாதவுரை—பொருந்தாவுரை இரும்—பெரிய மனாதி=மனோவாக்குக்காயம்.

(8 இன்+செய்யுள்+ஆக்கிப்பேசுவன்—கேள்+ஆசு+அகல+பிறப்பு+அற்றாய்.

(9) ஈயிருபகுதியான வாசகப்பொருள்:-தத்வரூபம், தத்வதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியம். மையறுதானம்=குற்றமற்ற இடம். குரிசில்=குரு.

(10) சந்திர மண்டலத்தை யளாவிய சிகரங்களையுடைய தெய்வமகேந்திர மலை. இது தெற்கிலுள்ளது; கடல்வாய்ப்பட்டது. விதி=பிரமன்.

(11) நித்திலம்=முத்து. நதிக்கூலம்=நதிக்கரை.

(12) பூக்களைக் கிளைகளிடத்தேயுடைய சோலைகள் நிறை

ந்த புண்ணிய நதியான காவிரி. தென்றற்கன்று = இளந்தென்றல். சந்தனமும் இளந்தென்றலும் தமிழுமுடைய அகத்திய னுற்கொண்டு வரப்பட்டபொருளே.

(13) விடந்தங்கிய பற்களையும், புள்ளியையும் கண்ணுகிய காதினையும் பெரிய வாயையுமுடைய ஆதிசேடனது தலையிலே தங்கியிருக்கின்ற பூமிதேவியினது இருதயம்போன்றதும் பூவிலிருந்து வடிகின்ற தேனை யொத்த காசிமாநகர்.

(14) நாமம் = அச்சம், ஆழிப்புல் = குமிழி-சேமம் = இன்பம். பான்மரம்—பாலையுடைய மரம்.

(15) இருந்தவர்—பெருமையையுடைய தபசிகள். தேசிகர்—ஆசிரியன். குருவளரிடம்—விசேடமுண்டாகக் கூடிய விடம்.

(16) உதக்கு—வடக்கு. சூரியனுடன் சந்திரன் கூடிய பின் கீற்றுப் போன்ற இளம்பருவத்தை யுடையது. பூர்வபக்ஷம் காரகங்கள் மூன்று—ரோகிணி 3, மிருசீரிஷபம், திருவாதிரை, பூசம்.

(17) வில்லை யொத்த நெற்றியினையும், மின்னைப் போன்ற யிடையினை யுமுடைய ஈசுவரியைப் பக்கத்தே யுடையவனே. மூவகைய தீக்கை—ஆதார, நிராதர, சாம்பவதீக்ஷை-பலவிதமா சான் பாசமோ சனந்தான் பண்ணும் படிநயனத் தருள் பரிசவாசகமான தமு—மலகில் சாத்திரம் யோகமௌத் திரியாதி யனேகமுள அவற்றினவுத்திரி யிரண்டு திறமா—மிலகு ஞானங்கிரியை யென ஞான மனத்தாலியற்றுவது கிரியை யெழிற் குண்ட மண்டலாதி—நிலவுவித்துச் செய்தல் கிரியா வதிதானின்னு நிர்ப்பீசஞ் சபீசமென நின்றிரண்டாய் நிகழும். என்பது சித்தியார்.

(18) சாம்பவ தீக்ஷயே விஞ்ஞான தீக்ஷயாம்.
மனுக்கள்—மந்திரங்கள்

## அரும்பதவுரை

(19) கிரியா தீக்ஷையில் மந்திர லோபம் கிரியா லோபம் வருமாகையானிது விசேடமாம்.

(20) கழிவரும்—நீங்காத. கருணையாரியன் — கருணையையுடைய ஆசிரியன்

(21) பணி— கட்டளை. ஒருப்பாடுற்று — ஒருவருவழித்தாகி. மண்மகன்— குலாலன்.

22-24 சீடனிருக்க வேண்டிய முறைமையை யுணர்த்துகின்றார். கடம்பவன புராணம். இலீலா சங்கிரக வத்தியாயம் சீடவிலக் கணம் பார்க்க.

(26) இருவிதத்திக்கை— ஞானங்கிரியை. ஒருவிதமுயிருள் நின்றே யுஞற்றுமாதார மின்றி—நிராதாரமான விஞ்ஞான தீக்ஷை யென்னும் சாம்பவி தீக்ஷையைச் செய்யும். வருமல கன்மங்கண் மன்னிய—மலமட்டு முடைய விஞ்ஞான கலர்க்கும் மலகன்மங்களையுடைய பிரளயாகலர்க்கும் முற்கூறிய தீக்ஷையும், மலங்கன்ம மாயையென்னு மும்மலங் கூடிய சகலர்க்குக் கிரியாதீக்ஷையைச் செய்யும் குருமூர்த்தமாய் என்பது தோன்ற குலவருளுருவ மாகியென்றார்.

(27) உலகாயதன் முதலிய புறச்சமயிகள்.

(29) கலுழ நிக்கிரகம் பண்ணி—துன்பத்தை நீக்கி. சதிர்—சாமர்த்தியம்.

(30) இறைவனூல்—ஆகமங்கள்

அந்த வருத்தமே விசாரித்துள்ளான்—ஆன்மாவினுடைய யின்ப துன்பங்களை விசாரித்துள்ளவன்.

(31) குத்திரங்கள்—பொய், வஞ்சனை முதலியன. அராகம், வெறுப்பு முதலியன வின்றி.

(32) அற்பு—அன்பு வலித்தல் விகாரம். பிரிதரா—பிரிக்கமுடியாத, சிவாநுபூதி ஒருக்கால் பெற்றது பின்னர் பிரிதலில்லையாம். கயநோய்—வயிற்று வலி முதலியன.

(33) மமதை = கர்வம். ஐயம் = சந்தேகம். மதியினில் விகற்பம் = ஒருவருக்குச்சொல்லுதலும் மற்றொருவருக்குக்கரத்தல் முதலாயின. தியதமம் = கெட்டதமோகுணம். உமையொரு பாகத்தெந்கோன்—உமாதேவியை யொப்பற்ற இடப்பக்கத்தின் கண்ணேயுடைய எம்மிறையாகிய சிவபெருமான்.

(34) தப்பறு—குற்றமற்ற.

(35) திரிமலம்—ஆணவங்கன்மமாயை.

(37) குரவன்மானிடரூபமாக விருந்து ஊண், நித்திரை முதலாயவற்றை யநுபவிப்பினு மவன் தாமரையிலையில் நீர் எவ்வாறு நின்றும் ஒட்டாமலிருக்கின்றதோ அவ்வாறு அவனது ஆன்மா உலகப்பற்றின் வேறாய்ச் சிவபிரானையே நாடிநிற்கும். புழல்—துவாரம்.

(39) குருசிஷ்ய பரம்பரையாகத் தீக்கை முதலாய பெறுமல் வாசாஞானம் பிரயோஜன மற்ற தென்பதாம்.

(40) காமமாதி யறுகுணம்—காமம், குரோதம், லோபம் மோகம், மதம், மார்ச்சரியம்.

(41) குற்சிதம்—அருவருப்பு. குணம் நற்குணம்—அசாவது சாத்துவமிகுதல். ஐந்து தீக்கை—பஞ்சப்பிரமங்களையுடைய சிவதீக்ஷை.

## குருபூசை.

(1) முன்னஞ்சொன்ன குரவன்—சற்குரு விலக்கணத்திற் கூறப்பட்டவன். முன்பூ பறிக்கைசெய்து—தீக்ஷா ஸ்மஸ்காரங்கள் செய்வதற்குமுன் எழிற்குண்ட மண்டலாதிகள் செய்வதன்பொருட்டு கொண்டுவரப்படும் மண்ணைத் தேர்ந்தெடுத்து வருதல். இதற்கு ம்ருத்சங்கிரஹண மெனப்பெயர். இதின் விரிவை அகோர சிவாசாரியார் பத்ததியிலும், ஆசாரியவபிடேகத்தர்க ளிடத்து முணர்க.

# அரும்பதவுரை

சீதற மண்டபம்=குற்றமற்றபடி மண்டபம் திருமாணிக்தல். எழிற்குண்ட மண்டலாதி என்னுஞ் சிவஞான சித்திச் செய்யுட்கு சிதம்பரநாத தேசிகர் தம மதுரையில்.

விதிவழி மண்டபஞ்செய்து, குண்டமண்டல மிட்டு, வடக்கு மண்டபத்தைப் பதினேலுக்குப் பதினேன்கு சூத்திரமேற்ற, நூற்றறுபத்தொன்பது பதம் பிறக்கும். இதிற் சமயம் முதலிய மூன்று தீக்கையினை யாயின் நடு ஒன்பது பதத்திலே மண்டலேசுவரனுக்கு ஒரு வேதிகையும், அதற்கு மேற்கு இட்டலிங்க பூசைக்கு ஒரு வேதிகையும், ஈசானத்திலொன்பது பதத்தாலொரு வேதிகையும், மண்டலேசுவரனுக்குக் கிழக்கு ஒன்பது பதத்தினடுவே குண்டமுஞ் செய்க. என்பர்.

நாற்றுவாரத்தோடும்—நான்கு துவாரங்கள் (வாயில்களிலும்.)

(2) அதனிடை: அதன் மத்தியில்=ஆனின் புதிய நன்மயங்களைத்த புனலினேன் மெழுகி=சாணத்தால் மெழுகி. விதிபெறு கெவ்வியம்—விதிப்படி வைத்த பஞ்ச கவ்வியம். விசிறி தெளித்து. பரமநூல் — ஆகமங்கள். மண்டபாலங்காரஞ் கூறுகின்றார்.

(3) கூலம்—விருக்ஷ தோரணங்கள். கிழக்கில் ஆலந்தோரணமும், தெற்கில் அத்தி, வடக்கில் அரசும், மேற்கில் கொன்றையும். தொழுதி வண்டிமிர்: வண்டின் கூட்டங்கள் சப்திக்கின்ற. சூதபல்லவம்—மாவிலே. ஆவரித்தல்=கட்டுதல்

(4) கவரி—சாமரை. துகில்—சீலை. தமனியபீடம்—பொற்பீடம்.

(5) உபதேசஞ்செய் தேசிகன்=ஆசிரியன். ஒருமை கொள் மனத்தான் மூழ்கி—ஒருப்பாடுற்ற மனத்தினையுடையனாய், புனல்மூழ்கி. குருவளர்—ஐசுவரியம் வளர்கின்ற. நீறு—விபூதி. கொற்றக்கண்டிகை—சயம்பொருந்திய உருத்திராக்க மாலிகை. துரியச் சந்திமுடித்து.=ஆசாரியன் காலசந்தி

மத்யானசந்தி இரண்டுஞ்செய்து போஜனம் வர்ஜித்து சாயங் கால சந்தியும் விசேஷ சந்தியுஞ்செய்க என்பர் அகோர சிவா சாரியர். இதுமுதல் ஆசாரியன் செய்துகொள்ள வேண்டிய வைகளைச் சொல்லுகின்றார்.

(6) நூபுரம்=சிலம்பு.

(8) தென்றிசை நோக்கு மெங்கள் தெய்வ நாயகனார் மூர்த்த மொன்றிட மனத்துளாக்கி=தென்றிசைக்கண் ஆன் மாக்களுய்யும் வண்ண நடனஞ்செய்கின்ற சிவபிரானை மன திடத்தே நிறுத்தி, இருதயமாகிய கமலத்தில் அடியே சுத்த வித்தையாகிய பீடமாகவும், இதழ்களில் அஷ்டவித்யேசுரர் களும், பொகுட்டில் சதா சிவமூர்த்தத்தையும் தியானித்து நிறுத்தி.

(9) உறும்பெரும் புலன்களெல்லாம் வென்ற மாணுக்கர்— மற்றவை கட்காதாரமான ஐந்து பேறறிவுகளையு மடக்கி வென்ற சீடர். அட்டநதி=கங்கை, யமுனை, சரசுவதி, ஸிந்து, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி.

(10) ஐந்து சுத்தி—பஞ்சகவ்விய சுத்தி. ஒருமருப்பினன் =ஒற்றைக் கொம்பினை யுடைய விக்னேசுரன். உஞற்றுதல்— செய்தல். தன்னுட் கோகன கத்தில்—இருதய கமலத்தில்.

(11) புறம்பே பூசைக் கியற்றுமாபோல்—ஆசாரியன் நித்தியப்படி ஆன்ம பூசையியற்றுவது போல். நிர்வாண தீக்ஷிதாவான்கள் பூசைசெய்தல வசியமாகலின் அவர்களிதனை நன்கறிவர்

(12) சந்தமார் மதுக்கள் கூட்டித் தாபித்த வமிழ்த மாவது—பஞ்சாமிர்தம்.

(13) திருவொற்றுடை—பரிவட்டம்

(15) நல்லவான் பாலளாவிய சரு—சுத்தமான பசுவின் பாலொடு சமைத்த அவிசு, சிறை யுடற்பொறை=சிறைப்பட்ட உடலினதுபாரம்.

## அரும்பதவுரை

(16) விஞ்ஞான கலரை உயிருக் குயிராய் நின்றாண் டும், பிரளயா கலரையிச்சா சத்தியா லாண்டும், சகலரைக் குரு மூகூர்த்தமாய் வந்தாண்டும் காத்தருள் புரிகின்ற குருவே.

(17) அருந்தவர் நால்வர்—சநக, சநந்தன, சநாதன, சநற் குமரர்.

(19) துன்பம் நிறைந்த வாணவ மலத்தாலுண்டாகிய இருளினால், இன்பம் நிறைந்த கடாக்ஷமிழந்த வெனக்கு மெய்ஞ் ஞான மென்னும் அன்பு நிறைந்த அஞ்சனமாகிய சலாகை கொண்டு சேதித்து என்னுடைய பெரிய விழிகளிரண்டும் விளங்கும்படி செய்தருளியவனே.

(20) ஆதார சத்தியூர் முதநாதமீறாய்—பிருதுவி தத்துவ முதல் நாதம் வரை.

(21) இருவினை—நல்வினை தீவினை.

(23) பாசம் போம்படி தீக்ஷையாதலின், அவை யிற்றில், மந்திர முதலிய வைந்தும் கலையில் வியாத்தியா கையான் கலையை முற்கூறினார். வழுவிலா வழியாறு மந்திரங்கள் பதங் கள் வன்னங்கள் புவனங் கடத்து வங்கள் கலைகள்—கழிவிலா துரைத்த முறை யொன்றினொன்று வியாத்தி கருத்து கலை சத்தியின் கண், சத்தி சிவன் கண்ணும் என்பது சித்தியார்.

(24) கோடா—கோணாத.

### ஞானதீக்கை.

(1) நெருநல், நேற்று. நெருநலுளனொருவ னென்றார் பொய்யாமொழியார்.

முதநாட்பகல் உபவாசமாயிருந்து உற்ற பெரிய அர்த்த யாமத்தில் பஞ்சகவ்விய முண்டு. ஆன் ஐந்து—பஞ்சகவ்வியம். சிவகூர்ச்ச மென்பர் பிராயச்சித்த சமுச்சயமுடையார். புலர் வதன் முன்—விடிவதற்குமுன்.

குறித்து = அதிவாசக்கிரியையில் முடிவாகச்செய்யப்படும் முற்கூறிய பஞ்சகெளவிய முண்டபின் அரிதுயிலமரும் போது கண்ட கனவுகளைக் குறித்து; தயிர் நெய் மாம்ஸ முதலானவை நற்சகுனம் ஆனையேற்றம் தான்ய சம்பத்துண்டாம் வெள்ளை வஸ்திரம் தரித்தல் நன்மை தன்னுடைய அவயவங்கள் அறுந்துபோவது, கரிபூசிக்கொள்வது, தான் நல்லெண்ணை தேய்த்துக்கொள்வது, இருட்டில் வீழ்கை, கிணற்றில் வீழ்கை ஆகா. இவை கட்குப்பிராயச்சித்த ஹோமம் செய்யவேண்டும்.

அற்றைக்கடன் = அன்று செய்யவேண்டிய நித்தியகருமம்

வான்றுளி—மழை.

(2) ஆனைந்துமழகார்மனுவோடளித்தல் = ஆத்ம, வித்தை சிவதத்துவ மந்திரங்களோடு, பஞ்சகவ்விய மளித்தல் முதனாளிரவு அளித்ததைத் தவிர்த்து மறுநாள் புனரபி பூசையாரம்பமாகுமுன் சிவகூர்ச்ச மளித்தல் மரபு.

(3) மண்டபத்துள்ள யாகேசுவரன், யாகவர்த்தனிகளைப் பூஜித்து சீடனதுபோத மறும்படி யாஞ்ஞாபிக்க வேண்டுமென்று நமஸ்கரித்து விஞ்ஞாபனஞ்செய்து சீடனுக்கு சாக்ஷி சுத்திசெய்து.

(4) அஸ்திர மந்திரத்தால் நீரைக்கொண்டு சுத்திசெய்து. சிவமாங்கர முடிமீதிலளித்தே—சிவமாம் படியாகக் கையைத் தன்றலைமேற்செய்து. சிவஹஸ்தஞ் செய்தலாவது. வலக்கையிடக்கைகளில் உள்ளங்கைகளிலும் புறங்கைகளிலும்சந்தனத்தைத் தடவி மஹா முத்திரைகொடுத்துச் சிரமேற் கை யஞ்சலியத்தராயிருத்தல்.

(5) ஆசாரியன் திருவருளையுடைய சிவபிரானது உருவத்தை தாமரைமலர்போன்ற முகமும், இரண்டு விழிகளும், பெரிய புஜங்களும், அழகுவாய்ந்த சிவந்த பட்டுவஸ்திரமும், தேன் ஒழுகாத வாசனையுடைய பூக்களாலமைந்த மாலையையும், சிவந்த சந்தனத்தையும் யணிந்தவராயும், ஒளிவீசுகின்ற

பெரிய ஆரதனங்களா லமைந்தமகுடத்தைத் தலையிலணிந்தவ ராயுமிருப்பவராகத்தியானித்து.

(6) அவ்விதமாய்த் தியானிக்கப்பட்ட சிவபெருமானைப் போற்றி, யவன்றனனுக்கிரக மமைந்தே யெனமாறுக. முத னாளிற்செய்த குண்டத்தினின்றும் மூலமந்திரத்தின லக்கினி யையுண்டாக்கி தென்புறத்திலுள்ள நெய்யின லாகுதிசெய்ய வென்பது வெளிப்படை.

குண்டவுருவான மூலாதாரத்திலுள்ள அக்கினியை, புருவ மத்தியமான ஸ்தானமும் சந்திரமண்டலமுமான ஸ்தானத்தி லுள்ள விந்துமயமான அமிர்தமே நெய்யாகச்சொரிந்து எழுப்பி, அப்படிச்சொரிவதற்குக் காரணமாகத் தன்மனமும் புத்தியும் நிரை நிரையாக சிருவமும் சிருக்குமாய்.

(7) கலைகள்=நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந் திய தீதகலைகள். சமித்தாகவும், செறிதல் உட்டங்குதல். நாதமாகிய தருப்பையினலே. ஓராகிருத சுத்தி—நாடி ஸந் தான முதலிய ஓமங்கள் செய்து. முன்னை யிருத்தல்=அக் கினி முன்னேயிருத்தல். சத்தியோ ஜாத மந்திரத்தாலோ மஞ்செய்த பின்.

(8) சிவ பெருமானது திருவருளை விரும்பிய சீடனது தேகத்திலே முதனாளிலேயே ஷட்த்துவாக்களையும் அந்தந்தத் தானத்தே நிறுத்துவதற் கறிகுறியாக வைத்து, முடிந்த நூலை (பாச சூத்திரத்தை) மறுபடி சேர்த்து அவை கட்காக ஓமஞ் செய்து.

(9) மேலே கூறப்பட்ட ஷடத்வாக்களை யொன்றோ டொன்று சேர்க்கும் வரையில் சிவ மநு (மூலமந்திரத்தால்) வினல் ஓமஞ் செய்து பின் நிவர்த்திஸ்தானத்தில் தத்வ முத லியவைகட்கெல்லாம் ஓமஞ்செய்து மூலமந்திரத்தால் பூரணா குதி செய்து. அத்வ சுத்திசெய்யும்படி யாரம்பித்து நிவர்த்தி

கலையிலிருக்கும் காலாக்னி தத்துவத்தில் ஆறு புவனங்களும், பூமியில் கிழக்கே பத்துபுவனமும், அக்கினிதிக்கில் பத்து புவனங்களும் தெற்கு, நிருதி, மேற்கு, வாயு, வடக்கு, ஈசானம், பூமியின்கீழ் மேலுள்ள முறையே பத்துபத்து புவனங்களும், பிரும்மாண்டத்தின் மேலுள்ள விரபத்ரை, பத்ர காளியை யாகிய இரு புவனங்களும், வர்ணபத, மந்திரங்கட்கும் முறையே ஓமஞ் செய்து பூரணாகுதிகொடுத்தும் பிரமனை யதிட்டித்துச் சீடன் பின்னரிடையூறுறாம விருத்தல் பற்றி, சகல யோனி வாயிடைப்பட்டு மீளுதல் கருதிச் செய்தலாம்.

(10) மூலாததாரவக்கினியிலே யருட்சத்தியிடத்து அழகு விளங்குகின்ற யோக மூர்த்தியாகப் பாவனைசெய்து அவ்யோக மூர்த்தியினிடம் சீடனது ஆன்மாவைக் கிரஹித்து சகல யோனி வாய்ப்படும்படி பொருத்துதல் சங்கமமென நூல்களோதும்.

(11) எக்காலத்தினு நீங்குதலில்லாத மூல மலத்தினின்று நீங்கி, ஆவி—ஆன்மா (சீடன்). சுதந்தராதி:—பும்ஸவன மென்பது கெர்ப்பமான ஸ்திரீகட்கு மூன்றுமாதத்தில்செய்யவேண்டிய நசியம் பிழிதல் முதலிய கிரியைகள் இவை வழக்கமாக சீமந்தோந்நயநத்திற் செய்யப்படுகிறது. ஸ்திரி, நபும் ஸ்த்வம் நீங்கச் செய்யப்படுவது பும்ஸவனம். கூன் குருடுமுதலிய தோஷம் வாராமைக்கு சீமந் தோந்நயனம்.

(12) அருவம்=உருவமற்றது. ஆன்மா உருவமற்ற மாயையை இப்படிப்பட்ட தன்மைத் தென்றறிவதே சீமந் தோந்நயனமாம்.

(13) திரிமலம்=ஆணவம், கன்மம், மாயை.

(14) சிவத்வத்தைச்சேர்ந்து பரம கருணாநிதியினருளால் ஆனந்தம் நிரம்புதலே யன்னப்பிராசனமாம்.

துரிசறு—குற்றம் நீங்கிய.

(15) இந்திரியங்களது வளர்ச்சியைத் தடுத்தல் பலராலும் புகழப்படுகின்ற மாவிரதிகளது வழக்கமாம்.

(16) மநு—சத்தியோ சாதமந்திரம். கோதானம்—பசுத்துவ நிவர்த்தி.

(17) மண், பொன், பொருளாசை நீத்தல் நீராடலாம். இறைவநூல்— ஆகமங்கள். முத்தான்மாக்கள் சிவசத்தியோடு ஒன்றறக்கலத்தலே விவாகம்.

நிமலநூல்—ஆகமங்கள். நிமலன்—மலமற்றவன். "பாகினைச் சுவை கற்பித்த பணிமொழியவர் பொன்பூ, வென்றாகிய வேணவா" என்றார் பிறரும்.

(18) அநந்தேசுரனது சத்தியாகிய கிரியாசத்தியோடு அழுந்திடாது வெளிப்படுவதே வானப்பிரஸ்தமாம். வனத்திற் சேறல்— இல்லறநீங்கித் துறவறமடைதல். இங்கு திரோதாயி மலமறைப்பினின்று நீங்குதலாம். இவ்விதமாய் சிவனைப்பாதிக்கின்ற பதினறு வர்க்கங்களேயும் நீக்கி அவைகட்குமுறையே ஆகுதிமூலமாய்ச் செய்து பூரணகுதியும் செய்து.

(19) சந்திரனைப் பிணித்த இராகு நீங்கிய காலத்துத் தோன்றும் வெண்மதியம்போல மலபந்தத்தினின்று நீங்கிய சீடனது ஆன்மாவை பிரமனடி துவார வழியாகச் சிவபெருமானிருப்பிடமாகிய தாமரை மலரிடத்து வைத்து; புழை: துவாரம். ஏது—ஏணி. கோகநகம்—தாமரை.

(20) ஆறத்துவா—கலா தத்வ புவன வர்ண பத மந்திரங்கள்.

(21) மேலே சுத்தமாக்கப்பட்ட நிவர்த்தி கலேயானது அசுத்தமாயிருக்கிற பிரதிஷ்டா கலேயிலொடுங்கினதாகப் பாவித்து அவை ஒன்றினென்று சுத்தமாகி அடங்குமாறு நினைத்து மந்திரங்கள் பதங்களிடத்தும், பதங்கள் அக்கரங்களென்னும் வன்னங்களிடத்தும், வன்னங்கள் புவனங்களிடத்தும், புவனங்கள் தத்வங்களிடத்தும், தத்வங்கள் கலேயிலு மொடுங்கும்.

# தசகாரியம்.

சிவஞான சித்தியார் ௮-வது சூத்திரம் 5-7 பார்க்க.

(22) காரணாதிபர்—சதாசிவமூர்த்தி.

சிவபாவம்—சிவபெருமானாக நினைத்தல். பூரணாகுதி தீக்ஷையின் பொருட்டு ஸ்தாபித்த வாகீஸ்வரி வாகீஸ்வரரை யதா ஸ்தானத்திற்கு யெழுந்தருளும்படி வௌஷடந்த மூலத்தால் பூரணாகுதி செய்தல்.

பரை—ஆநந்தம்:

தனு—சூக்குமசரீரம்.

(23) சர்வாந்தர்யாமியாய் வேண்டுவார்க்கு வேண்டுவதை யளிப்பவனாகிய சிவபெருமான். சிஷ்யனது ஆன்மா ஒன்று கூடியதை குற்றமற்றவரான சிவபெருமானிடத்துப் பொருந்தச்செய்து.

(24) அத்வாக்கள் ஒடுங்குமாறோங்கி, சர்ப்பாபரணனிடத்து இந்திராதி நாத கலைவரை, வியாபினியாதி அனாச்ருதை கலைவரை அதற்குமேல் கரணசமனாந்தக் கரணசுத்தாத்மதத்வ உன்மனாத்ம வித்யா நிவாக்ய தத்வத்யங்களால் ஓங்கி வியாபகமான தேகமாகப் பாவித்து.

(25) ஆன்மாவானது மேலே கூறியபடி வியாபக பான்மையான, பிரமாணங்கட் கதீதமானதாகவும், ஒப்பில்லாததாகவும், தனுகரணங்கட் கதீதமானதாகவும்.

(26) தான் மௌனமாகி துவிதமத் துவிதமின்றி யோஜித்து ரூபத்தையுடைய சீடனை யணைத்து, அவன் றலையில்.

(27) சீடனை சிவபெருமான் சந்நிதியில் நிறுத்தி அவன் சிவன் சத்தி வடிவமானதாகப் பாவித்து, சிவபெருமானது கிருபை வந்தடைந்ததாக நினைத்து தன்கைகளால்.

(28) சீடன் தான் என வொருபொருள் இல்லையென்று கொடுக்க.

(29) மனோ வாக்குக் காயங்களாலும் மகிழ்ந்து சீடன் கொடுக்க.

(32) சீடனுக்கு சிவ பெருமானுக்குச் சாத்தப்பட்ட பூமாலைகளைச் சூட்டி அமிர்தத்தால் மந்திர பூர்வமாக வபிடேகித்தே. கிரியாதீக்ஷையில் வர்த்தனி கும்ப ஜலத்தால பிடேகித்தல்.

(33) முப்பொருள்—பதி, பசு, பாசம். முன்னது—பதிப்பொருள். ஐயிரு பகுதி—தசகாரியம்.

(38) நீடண்டுபோல—நீண்ட தண்டம் போல முத்த—முதிர்ந்த காசு—பொருள், தூசு—பட்டாடை நிதிக்குவை தானும். தானும் பின்னது சீடன்.

(39) அணி செய்து, அலங்கரித்து. கம்பலம்—மேற்கட்டி, பிணிமுறுக்கு—ஒன்றுடனொன்று சேர்ந்து திருகல் முறுகலா யிருத்தல்.

(40) கொங்கு—நறுமணம், மகேசுவர பூசை செய்தும்.

(41) பரிகலம்—பரிமாறுதற் குற்றகலம், இலை, ஆன்பாற்பதம் பாலினாற் சமைத்த வன்னம்,. பெரியோர்களை யமுது செய்வித்து, கொண்டு வந்து மனைபுகுந்து குலாவு பாதம் விளக்கியே—மண்டு காதலினாதனத்திடை வைத்தருச்சனை செய்தபின்— உண்டி நாலுவிதத்திலாறு சுவைத் திறத்தினி லொப்பிலா—அண்டர் நாயகர் தொண்டரிச்சையிலமுது செய்யவளித்துளார். என்பது பெரிய புராணம்.

## தத்துவரூபம்.

(1) என்று=இவ்வாறாக, கேளாநின்ற புதல்வன்=கேட்டசீடன். அருள்செய்தல்=சொல்லுதல். "செய்தருள்க" என்றார் பிறரும்.

(2) ஒன்பதோடொன்று=பத்து.

உத்தேசம்:—பெயர் மாத்திரமே கூறுதல்.

(3) ஐயிருகாரியம்=முற்கூறிய பத்துக்காரியம். ஒகை உவகை. பின்பத்துப் பாக்களால் இலக்ஷணப் பரீக்ஷை கூறுகின்றார்.

(4) சமவேதை=விட்டு நீங்காமை, பவமுறு=பக்குவமுற்ற. நாலேழாகமம்=இருபத்தெட்டாகமங்கள்.

(5) விந்துவினாலும் மாயையினாலும் தூல சூக்கும தத்துவங்களைந்துந் தநுகரண புவனபோக மெனு நான்கிலடங்கும்.

(6) மேதினியாதியாக: பிருதுவி தத்துவ முதலாக—மேய, உண்டாகிய.

(7) பஞ்சபூத முதல் சிவமீறான தொண்ணூற்றாறு தத்துவங்களையும்: ஆம்+முறை, உள்+எண்ணி,=மனத்தினிடை, நகுதல்=பரிகசித்தல்.

(8) வன்னம்=அக்ஷரம்.

(15) மதிசெய்தார்=அறிந்த மேலோர்.

(16) உபாதான காரணத்தால் இலயமாதிபேதமூன்று=இலயபோக வதிகாரம்.

(17) குடிலை=மகாமாயை, பிரணவம்.

நாப்பண்=மத்தி.

அனாமயம்=நோயின்மை.

கோதில்=குற்றமற்ற.

(19) வாக்கு நான்கு=சூக்குமை, பைசந்தி, மத்திமை வைகரி, வீயா=அழியாத.

(20) கிரியைக்குக் காரணமாகிய விந்து. முன்சொல்=முன்கூறப்பட்ட ஆன்மாக்கள் ஈடேறும் பொருட்டுக் கருணை செய்யவந்த காரணத்தானே அதுவே யோர் பதமுமாகி.

ஐங்கலை=நிவர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதம்.

(21) நணுகல்=முற்றுதல், இழுதுவிற்கிடம்—வில்லூன்றிப் புழு.

(22) கிரியாசத்தி மிகுந்து ஞானசக்தி குறைந்தது ஈச்சுரம்.

(23) சுத்தமாயையான விந்துவிலே தத்துவங்களைந்து தோன்றுவது,

(25) தத்துவத்தின் வன்மையாலே ஆன்மாவைப்பற்றி மாயை சூக்குமமாயும் தூலமாயுந்தோன்றும்.

(27) நொடியிலார்=பற்றிலார். மாயாவாதிகள்.

(28) அநந்தேசுராருளினல் அசுத்த மாயையினின்றும் தத்துவங்களுண்டாகும். விகிர்தி=வேறுபாடு. பிரகிருதிமாயை.

(29) துடி=காலநுட்பம். அஃது நிமிடமெட்டுக்கொண்டது. காலமூன்று=இறப்பு, நிகழ்வு, எதிர்.

(30) பின்னது=காலம். நியதியின் பிரகிருதியால் நாமரூபம் பெற்று மோகத்தை யுண்ணும்.

(31) மோகினி=மாயை, அருங்கலை=விசேஷமானகலை சிந்தல்=குறைதல், கிரியாசத்தியினது வியாபகத்தால் முற்பிறவியில் எஞ்சி நின்ற பழவினைகட்குமூலகாரணமாயிருக்கும்

(32) அதனல்=மேற்குறித்த காரணத்தால். புத்திக்கு சத்த முதலானவை இன்றியமையாத தாகிறது.

(33) ஒடு=எண்ணுப்பொருள். புற்கலர்=ஆன்மா. சகலான்மாக்களுக்கு பஞ்ச தத்துவங்களும் உள்ளே சார்ந்திடும்,

(34) உயிர்கள் (புருடன்) ஞய தத்துவத்தினுலே போத்திருவத்தை யடைந்து, புந்தி மாயையான் மயங்கி மருவிய போகமெல்லாம் நாயகனருளினலே என்றும் நயந்திடும்; அக்காரணத்தான் மாயை, காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடனய வேழும் ஈச்சுர மெனப்படும்.

(35) பன்மையால் சத்தவம், ரஜஸ், தமோ குணங்க

ளெனக் கொள்க. மலங்கள் இரண்டாம் வேற்றுமை யுருப தொக்கது.

(36) ஸ்தூல சரீரத்தைப் பொருந்தியதத்துவங்கள். பின்னம்=வேறு படுதல்.

(37) தரும முன்னயவெட்டு தருமம், தானம், தவம், பேணல், ஞானம் கல்வி, நலம், கேள்வி.

(39) அகங்கார மூன்று வகைப்படும் மான தாகங்காரம், தைசதாகங்காரம், வைகாரிகாங்காரம்,

(40) விபு=வியாபக முடையவன்.

(41) பின் தோற்று மென மாறுக.

(42) கன்மேந்திரியங்களின் றொழில்கள். நிறை நிறையாக்கொள்க.

(43) சத்தமாதி சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

(44) பூதம், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆசாசம்,

(45) வாயு உற்பவித்து.

(46) பிராணனுதி பத்து: பரித்தல், அடைதல்.

(47) தூளி=பரமாணு.

(48) பிருதிவி கந்த முதலான ஐந்து தன்மாத்திரகளையு முடையதாயிருக்கும், நீர்கந்த நீங்கிய நான்கு தன் மாத்திரைகளையும், தீ, காற்று, ஆகாசம் அடைவே ஒன்றொன்று குறைந்து மடையும். மதித்தல்=ஆராய்தல்.

(49) கம்=காற்று. பூ=பிருதுவி.

(50) தாரணியாதி பத்து=பிருதுவி முதல் கந்தமீறான பத்தும் தநு, பன்னிரண்டும் கரணமாகும். அந்தக்கரண நான்கும் முக்குணங்களுஞ் சேர்ந்து உட்கருவியாம்.

(51) தூலம், சூக்கம், பரமென தேக முன்றும். பூத னுகிய விடத்துத் தூலமும், மற்றவை சூக்குமம். வயிந்தவம் பரமாகும்.

## அரும்பதவுரை

## தத்துவதரிசனம்.

| தத்துவம் | வடிவு | நிறம் | அதிபதி | சத்தி | கலை | இடம் |
|---|---|---|---|---|---|---|
| பிருதுவி | நாற்கோணம் | பொன் | அயன் | வாணி | நிவர்த்தி | இதயம் |
| அப்பு | பிறை | வெண்மை | மால் | இலக்குமி | பிரதிட்டை | கழுத்து |
| தேயு | முக்கோணம் | செம்மை | உருத்திரன் | ரௌத்ரி | வித்தை | நா |
| வாயு | அறுகோணம் | கருப்பு | மகேசுரன் | மகேசை | சாந்தி | புருவமத்தி |
| ஆகாசம் | வட்டம் | புகை | சதாசிவம் | உமை | சாந்தியதீதம் | சென்னி |

| தத்துவம் | நிறம் | வடிவு | அதிபதிகள் |
| --- | --- | --- | --- |
| மனம் | வெண்மை | அ | அயன் |
| புத்தி | சிவப்பு | உ | மால் |
| ஆங்காரம் | கருமை | ம | உருத்திரன் |
| சித்தம் | வெண்மையும் கருமையுங் கூடியது | ० அல்லது விக்து | மகேசன் |
| புருடன் | வெண்மை | — | சதாசிவம் |

(4) திமிரம்=இருள் குந்தம்=குருந்திநிறம்.

(6) அத்வா=வழி, இம்முறை, சீயநோக்கு

(7) காலவங்கீசர்=காலாக்கினிருத்திரர்

(8) நாகம்=நாகலோகம். நூற்றுநாற்பதுள்ளும் கடுமை யுடையது முப்பத்திரண்டு; அதனுள்ளும் கொடுமையுடை யது விசி, ரௌரவம், கும்பிபாக மென்னு மூன்றும்.

(10) கூர்மாண்டலோகம் அதற்குப் புறம்பே. ஆடகர்க்கு ஒன்பது நூறு. தசமந்தராளம்...நூற்றுப்பத்து இயல் மிகுத்த கீழுலகம் எழுலகினுறுதி சொல்வேன்—அதல சுதலமதனைத் தாங்கி யஷ்டமத கோசங்களுண்டு—மதகோசங்கள் கனம் பிரித்து வளர்ப்பவராடக மூர்த்தி—ஆடகரைத்தாங்குவது அருள் முனிகள் கூன் மாண்டங்கண்டாய்—சூடிய கூன் மாண்டர் தம்மை சுமப்பது காலாக்கினிருத்திரன்—காலாக்கினி ருத்தி ரர் தம்மைக் கனம்பொறுக்கச் சேஷகனுண்டு—மேலாதி தான த்திற்கு திவ்ய வஸ்து ஒருவனுண்டு—அவனொருவன் திருவரு

ளாலண்ட மனேக முண்டு-- நவமான வண்ட மொன்றினடக் கையினுற் ஜெருத்தரை தேன்...என்முர் பிறரும்.

(16) மதிமகன்=புதன். புகர்=வெள்ளி மந்தன்=சநி

(20) மாதிரம்=திசை.

(21) பெரிய அரவத்தோடு; அமிர்தம் போன்றமேனி.

(23) அமரேசாதி=இந்திரன் முதலிய திக்குபாலகர்கள்.

(27) இவ்விதமாகச் சொல்லப்பட்ட தானங்கள் நாற்ப தாகும்.

(29) முக்குணம்=சத்துவ, ரஜஸ், தமோ குணங்கள் தமோ குணம் இந்திர நீலம்போலும், ரஜோகுணம் அரதனம் போல் சிவந்த நிறமாயுமிருக்கும். சத்துவம் படிக நிறமாயுமிருக் கும். அதிபதிகள் அயன், அரி, அரனும்.

(40) விபு=வியாபக முடையவன்.

(42) உபயம்=சகள நிட்கள சிவன்.

(43) சகளம்=மாயாரூபம். உகளம்=இரண்டு.

(44) ஆலம்பம்=பற்றுக்கோடு. அசலம்=சலித்தலில்லா தது.

இதன் விரிவெல்லாம் சித்தியார் VIII—2 உரையிற் காண்க.

(45) ஆறாறுரு தத்துவம்=முப்பத்தாறு தத்துவம் குழாம்=கூட்டம்.

ஐந்து, எழு, ஆறுநான்கு=இருபது நான்கு ஆன்ம தத்து வம், எழு வித்தியா தத்துவம், முன்னது சிவதத்துவம், இது பிரேரகாண்ட மென்னப்படும்.

(46) போக சயித்திரதமென்று பெயர்.

(47) ஏயும்=பொருந்தும்.

(49) அடைவே மந்திரம், பதம், வன்னம், புவனம், தத் துவம், கலை ஆகிய ஆறத்துவாவும் ஒன்றிலொன்றடங்கிக் கலையிலொடுங்கும்.

## தத்துவசுத்தி.

(1) பிறப்பகன்ற மாயை = நித்தியமான மாயை.

(2) அறல் = அப்பு: ஒடுக்கமுறைமை கூறுகின்றார்.

(3) முக்குணம் = தத்துவம், இராசதம், தாமசம். கலை, நியதி, காலம் மாயையி லொடுக்கம்.

(4) மாம மாத்திரை = தன் மாத்திரைகள். மானும் = ஒத்த.

(7) இருபத்து நான்கு தத்துவங்களும் ஆன்மாவிடத் தேயடங்கிடும்; ஆன்மாவினிடத்து அராகத்தை முன்னிட்ட ஆறும் வித்தையிலொடுங்கும்.

## ஆன்மரூபம்.

(1) சொல்வோம் கேட்பாயாக, அனுரூபமலினன் = பரமாணு ரூபம். வீய்தல் = கெடுதல். புற்கலன் = ஆன்மா, பசு, ஆன்மா, புருஷன் முதலாயவை. அவத்தை மூவகை = அவை கேவலம், சகலம், சுத்தமென்பர். ஆன்மாவும் மூவகையென்று கொள்க.

(2) உருவம் = மேற்கூறிய அணுரூபம். மாற்றுதற்கரிய போகம்

(3) ஆவி = ஆன்மா. கலையினால் தொழிலுண்டாகும், வித்தையின் இயல்பான ஞானமுண்டாகும். அராகத்தாலிச்சையும், குணங்களால் மலபந்தமு முண்டாகும்.

(4) புந்தியாதிகரணம் = புத்தி, அகங்காரம், மனம், சித்தமென்னு மந்தக்கரணங்க ணான்கு. குழுவுதல் = சேர்தல்.

(5) பொறிவழி = பஞ்சேந்திரியங்களை வழியாக, அறிவுறுதையஞ்செய்ய = நிச்சயிக்காமற் சந்தேகத்தைச் செய்ய. மான் = மாயை

(6) போகவுன் முகன் = போகத்திலிச்சையுடையவன்.

(7) ஆன்மாவுக்கேற்பட்டகாலமுடிவவடய தீக்கை = முற்கூறிய சாம்பவிதீக்கை.

(9) புரியட்டகம்=சூக்குமம்.

(10) மலபாகத்தால்=மலபரிபாகமானபோது.

(12) தன்மம், அதன்மம் எனவிருவகை. ஊற்றமாய்த் தோன்றுதல்=ஊற்றுக்கண்போ லுண்டாதல்.

(13) மாயை, மாயேயம் என்பதன் குணங்களை வியவகரிக்கின்றார்.

(14) திரோதமலத்தை வியவகரிக்கின்றார்.

(15) ஐவகை மலம்=கன்மம், மாயை, மாயேயம், திரோதம், ஆணவம்.

## ஆன்ம தெரிசனம்.

(3) சாக்கிர முதலாயைந்து=சாக்கிரம், சொப்பனம். சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

(7) சுவணம்=சொப்பனம்.

(9) நின்மலாவஸ்தையை வியவகரிக்கின்றார்.

(11) உன்மனை=பிரமரந்திரத்திற்கு மேற்பட்டது. ஷோடசகலை களிலொன்று. இரண்டு திருவிருத்தத்தால் காரணவஸ்தை வியவகரிக்கின்றார்.

(12 சீருணம்=செம்பு. குளிகைநீவக்கனகவுரு=இரதக் குளிகையைத் தடவ செம்பினது களிம்பு நீங்கித் தங்கமாமாறு போல.

(13) ஒருவா=கெடாத. அருள்வழியில்=சிவனது சத்திநி பாதமுண்டாகு மார்க்கத்தில்.

(4) ஏழைந்தைபைந்து முன்றேடி ரண்டொன்றுஞ் சாக்கிராதி—என்பது, ஏழைந்தாகிய முப்பத்தைந்து தத்துவங்கள், அஃதாவது ஞானேந்திரியங் களைந்து, கன்மேந்திரியங் களைந்து, தன் மாத்திரை களைந்து, அந்தக்கரணம் நான்கு உள்ள மொன்று, வாயுக்கள் பத்து, வசனாதிகளைந்து ஆகிய 35-ம் லலாடத்தினின்ற வவதரம் சாக்கிரம். ஞானகர்

மேந்திரியங்கள் நீங்க மற்றவை கண்டத்திலே நின்ற வவதரம் சொப்பனம். மேற்கூறிய வற்றில், சித்தமும். பிராண வாயுவும் உள்ளமும் நீங்கிய மற்றிருபத்திரண்டும் கண்டத்தில் நிற்க, இம்மூன்றும் இருதயத்தில் நிறுத்திய வவதரம் சுழுத்தி. மேற்கூறியவற்றில் பிராணவாயு, உள்ள மிவ்விரண்டு உடனே நாபிஸ்தானத்தில் நிற்றல் துரியம் உள்ள மொன்றுடனே மூலாதாரத்தில் நிற்றல் துரியாதீதம். இது கீழால வஸ்தையாம்.

(5) சோத்திராதி = ஞானேந்திரியங்கள். வாக்காதி = கன்மேந்திரியங்கள். விடயம் பத்தாவன = தன் மாத்திரைகள் 5.— வசனுதி 5. உட்கரணமைந்தாவன = அந்தக் கரணம் நான்குமுள்ள மொன்றும்.

## ஆன்மசுத்தி.

(1) நாமம் "ஊரும்பேரு முருவமொன்றில்லான்" என்றூர் பிறரும்.

(2) ஈசனே என்றதுபசாரம்.

(3) வினை = தன் மாதன்மம்.

## சிவரூபம்.

(1) தருப்பணம் = கண்ணாடி,

(6) எட்டயிலம் = எள்ளிலெண்ணெய்.

(7) ஈசானுதி பஞ்ச மந்திரங்கள் = ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்.

அந்தரங்க மந்திரங்கள் இருதயாதி = இருதயம், சிரசு சிகை, கவசம், அஸ்தரம், நேத்திரமாகிய ஆறும் அந்தரங்க மந்திரங்கள்.

(8) அரனுக்கு மேற்கூறியவை உள்ளே ஏற்பட்ட கர்ணங்கள் ஆரணி முதலிய சத்திகள்.

# அரும்பதவுரை

## சிவதரிசனம்.

(1) அாணுகிய கதிரோன். மலமுதல்=மலம், கன்மம், மாயை.

[2) முன்: சிவரூபம் 6-வது செய்யுளில் உரைத்துமுன்= முன்னருரைத்ததுமன்றி, தேவதேவ: தேவர்கட்கு மேலாய் தேவை யொத்த சற்குருவே.

(3) சேதனம்=அறிவு. செகம்=உலகம். கோது=குற்றம்

(4) பிணை=மான்.

(8) செறிந்து=பொருந்தி.

(14) ஆவரணம்=மறைப்பு. அனந்தன்=அந்தமற்றவன்.

## சிவயோகம்.

(1] உற்சாகாதி மாண்ட சாதனங்களாறு: எண்வகை யாசனங்களன்றி, நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல், சமயம், சுகம்.

ஒல்லல்=பொருந்துதல்.

## சிவபோகம்.

(2) முதலடி சரியையினிற்றல், இரண்டாமடி: பிரமாஸ்மி என்பது. 3, 4, மயக்கம்.

முற்றிற்று.





# பாட்டு முதற் குறிப்பகராதி.

## தசகாரியம்.

# பாட்டு முதற் குறிப்பகராதி.

# தகாரியம்.

## பாட்டு முதற் குறிப்பகராதி.





PRINTED AT THE SWADESAMITRAN POWER PRESS, MADRAS.

## அறிவிப்பு.

| | | | |
|---|---|---|---|
| திருவாரூர்ப் பன்மணிமாலை. | 0 | 2 | 0 |
| தசகாரியம் ராப்பர். | 0 | 12 | 0 |
| ஷை காலிக்கோ. | 1 | 0 | 0 |

சுவாமிநாத தேசிகர்.
ஈகரமடத்துத் தெரு,
திருவாரூர்.

S. I. R.